

நாரயே தக்பீர்! அல்லாஹு அக்பர்!

நாரயே ரிஸாலத்! யா ரஸூலல்லாஹ்!!

786/92

நாரயே விலாயத்! யா முஹ்யித்தீன்!!!

# சாஹெப் தர்கா


کونین کی دولت ہے درگاہِ اولیاء میں
اللہ کی رحمت ہے درگاہِ اولیاء میں
آنے سے یہاں ہم کو ملتا ہے خدا حافظ
کیا جلوۂ قدرت ہے درگاہِ اولیاء میں

ISHQ-E-RASOOLﷺ IS THE SOUL OF IMAN. ISHQ-E-VATHAN IS THE PART OF IMAN.

ரஸூலுல்லாஹ்வை நேசிப்பது ஈமானின் உயிர்.

படிக்க...! நாட்டை நேசிப்பது ஈமானின் அங்கம். பாதுகாக்க...!!


உருஸ் 30 இதழ் 129

ஷஅபானுல் முஅஜ்ஜம் - 1442 மார்ச்சு - 2021

நன்கொடை : ரூ. 10/ ஆண்டு சந்தா : ரூ. 100/


## உள்ளே ...






**முஹ்யித்தீன் ஷாஹுல் ஹமீத் (ஏ) முஹ்யித்தீன் அடிமை நினைவு சிறப்பு இதழ்**


விபரம் பக்கம் 3ல் காண்க


தர்கா இதழ் வாசகரான திருச்சிராப்பள்ளி ஜனாப் S.சையத் ஹபீபுல்லாஹ் சாஹிப் Administrative Officer, ( Retd ) Agri, dept., அவர்கள் தமது துணைவியார் S.துலாரி பேகம் அவர்களின் உடல் உபாதை நீங்கி, பூர்ண உடல் நலம் பெற வேண்டி இம்மாத இதழின் அச்சு செலவில் தமது பங்களிப்பாக ரூ.2000/- ஹதியா வழங்கியுள்ளார்கள். வாசகர்களை துஆ செய்யும்படி கேட்டுக்கொள்கிறோம்.


தேவைக்கும்,தொடர்புக்கும்...

M.SYED AHMED M.A.,
Editor Saheb Dargah Monthly,
74/176-A, Ist Floor, Gandhiji Road,
Opp.Erattai Mastan Dargah,
Thanjavur - 613001
Phone : 04362-270786
Mobile : 98415 78692
e-mail : editor@sahebdargah.org
www.sahebdargah.org



Printed by
Manickam Printers,Thanjavur - 613001
Phone : 04362 - 237953

RNI No. TNTAM/2009/30120
Rnp No.SSP/TJ/29/2020-22
Date Of Publication
1st day of the Month.
Posted On 5th day of the Month
at Thanjavur RMS






## குருகுல கல்வி முறையே சமூகத்தை சீர்திருத்தும்...!

மனிதன் மனிதப் பண்புகளோடு காலம் காலமாக வாழ்ந்து வருவதற்கான முக்கிய காரணம், அவன் தன் மூதாதையர்களைப் பார்த்து கற்ற ஒழுக்க முறைகள் மற்றும் குணாதிசயங்களே ஆகும். வாழையடி வாழையாக அவன் குடும்பத்தார், கோத்திரத்தார் புகட்டி வந்த நல் அறிவே அதற்கு மூல காரணமாகும்.

நாளடைவில் முன்னேற்றம், புதிய முயற்சி, நாகரீகம் என்ற பகட்டு வார்த்தைகளால் கல்வியானது பாடசாலைகளில் போதிக்கப்பட்டது. ஆரம்பகட்ட பாடசாலைகளில் கல்வியுடன் சேர்த்து ஒழுக்கம், நன்நெறி, நற்பண்பு, தன்னடக்கம், அறம் சார்ந்து வாழ்தல், மரபு வழி பழக்கவழக்கம், மரபு வழி விவசாயம் இயற்கையுடன் இயைந்த வாழ்க்கை, எளியோர் மீது இரக்கம், அனைத்து ஜீவராசிகளின் மீதும் அன்பு செலுத்துதல் போன்ற பற்பல மனித விழுமியங்களும் சேர்ந்து புகட்டப்பட்டன.

நாளடைவில் சன்னம் சன்னமாக மனிதனின் அடிப்படை பண்புகள் அனைத்தும் மறக்கடிக்கப்பட்டு இயந்திரத்தனமாக, கல்வி மட்டுமே பிரதானமான பொருளாக சித்தரிக்கப்பட்டு, பல கல்லூரிகளும், பல்கலைக்கழகங்களும் உருவாக்கப்பட்டன. கல்வி கற்பதே, இறைவனால் மனிதனுக்கு அளிக்கப்பட்ட பொக்கிஷங்களான நற்பண்புகளை பல கோணங்களில் வெளிப்படுத்தி உலக அமைதியை நிலைநாட்டுவதே என்ற கருப்பொருளை பலர் மறந்தனர். தொழில் செய்ய மனித இயந்திரங்கள் உருவாக்கப்பட்டன.

கல்வியின் ஒவ்வொரு துறையிலும், நிதம் வாழ்நாளை அர்ப்பணித்து அதில் பாண்டித்தியம் பெற்ற குருமார்கள், பெரியோர்கள், சான்றோர்கள், ஆசிரியர்கள் மறைந்து விட்ட இக்காலகட்டத்தில் கலாசாலைகள் தொழிற்சாலைகளின் நுகர்வு பொருட்களைப் போல், மாணவர்களை இயங்திரத் தன்மையாக, உற்பத்தி செய்து சந்தைக்கு அனுப்புகின்றன. இம்மாணவர்களால் சமூகத்திற்கோ அவர் தம் குடும்பத்திற்கோ எவ்வித பயனும் கிட்டாது. மாறாக குழப்பங்களும், சண்டை சச்சரவுகளுமே விளையும் என்பதை யார் அறிவார்?

பாமரனிடமுள்ள நற்பண்புகளும், மனிதாபிமானமும் கற்ற மேதையிடம் காண முடியவில்லை என்பதே கண்கூடாக உள்ள இந்த யுகத்தில், சமூகத்தில் மதிப்புடனும், மரியாதையுடனும் பல பேறுகளை பெற்று பொறுமையுடன் வாழ்ந்த நம் மூதாதையர்களின் வாழ்க்கை முறையை மீட்டெடுக்கும் சிறு முயற்சியாக அவர்களால் பயிற்றுவித்த சிறந்த கல்வி முறையான குருகுலக் கல்வி முறையையே நாமும் பின்பற்றலாம் என யோசித்தோம். அதை தவிர்த்து சமூகத்தை மேம்படுத்த வேறு ஓர் கல்வி முறை இல்லை என்பதே பலரது கருத்தாகவும் உள்ளது என அறிந்தோம்.

மனிதகுலம் எதிர்கொண்டிருக்கும் மிகப்பெரிய பிரச்சினைகளான முதலாளித்துவம், உலகமயமாக்கல் போன்ற பொருளாதார கொள்கை(ளை)களால், இயற்கை வளம் சுரண்டப்படுவதும், ஏழைகளின் வாழ்வாதாரம் திருடப்படுவதும், மனித குலத்தின் ஆரோக்கியம் திட்டமிட்டு பாழாக்கப்படுவதும், இயற்கை மரபு வழி - வாழ்க்கை முறையிலிருந்து மக்களை திசை திருப்புவதும், மனித குல சேவையாக பார்க்கப்பட்ட மருத்துவமும், சுகாதாரமும், வேளாண்மையும், கல்வியும் வணிகமயமாக ஆக்கப்படுவதும், அதை நியாயப்படுத்த பல காரண காரணிகளை கூறி மக்களின் நம்பிக்கைக்கு துரோகம் இழைத்து மக்களை அழிவின் பாதைக்கு இட்டுச் செல்வது என பற்பல கொடுமைகளை தினம் தினம் அரங்கேற்றியவண்ணம் இன்றைய உலகம் உள்ளது.

இந்த நிலைகளிலிருந்து மக்களை காப்பாற்ற, எதிர்கால சந்ததியினரை பாதுகாக்க அவர்களின் வாழ்வை வழி நடந்த, தற்போது நாம் ஓர் அறக்கட்டளையை நிறுவி, கல்வி, மருத்துவம், வேளாண்மை, சுய சார்பு சிந்தனையில், மரபு வழி வாழ்வை மேற்கொள்ள ஜாதி, மத, இன, நிற, வேறுபாடின்றி, ஏழை பணக்காரன் என்ற வித்தியாசமின்றி அனைவரின் தேவையையும் பூர்த்தி செய்யும் வண்ணம் கான்காஹே ஷுத்தாரியா நிஜாமி தஅலீம் என்னும் குருகுல கல்வி பாடசாலை நிர்மாணித்து கல்வி மற்றும் பயிற்சி சேவை புரியலாம் எனும் யோசனையை பலருடன் ஆலோசித்தோம்.

அதன் மூல நிகழ்வாக கடந்த 09.01.2020 ஒரு கூட்டம் நடைபெற்றது. இக்கூட்டத்தில் கலந்து கொண்ட அனைவரின் ஒப்புதலுடன் சட்டப்பூர்வமாக அரசு அங்கீகாரம் பெற்று சக்காப் தர்கா பவுண்டேஷன் என்ற அமைப்பை நிறுவி அதன் மூலம் கிள்ளையில் கான்காஹே ஷுத்தாரியா நிஜாமி தஅலீம் என்ற குருகுல சாலை வரும் ரமலான் மாதத்திற்குப் பின் முறைப்படி இன்ஷா அல்லாஹ் துவக்கப்படும் என்று மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

அதற்கான அடிப்படை கட்டுமானம் மற்றும் நூல்கள் வழங்கி நற்சேவையாற்றும் அனைவருக்கும் நன்றிகளை உரித்தாக்கி இருலோக இரட்சகர் ரஸூல் ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் அவர்களின் அருளாசி கிடைத்திட துஆ செய்கிறோம்.

**சிந்திப்போம்...! செயல்படுவோம்...!**
**வஸ்ஸலாம்...!**

அனல் வாஹிதுல் ஃபர்துல் கபீரு ஃபீ ஜாத்திஹி!

# தீன்! தீன்!! முஹ்யித்தீன் என முழுமையாக முஹ்யித்தீன் ஆண்டகையில் கரைந்த முஹ்யித்தீன் ஷாஹுல் ஹமீது (எ) முஹ்யித்தீன் அடிமை!

நமது தர்கா இதழின் தொடக்கம் முதலே முஹ்யித்தீன் ஆண்டகையின் அற்புத வரலாற்று குறிப்புகளையும், ஆண்டகையின் வாய்மை வரலாற்றையும் தொடர்ந்து எழுதிவந்த முஹ்யித்தீன் ஷாஹுல் ஹமீது என்னும் முஹ்யித்தீன் அடிமை அவர்கள் கடந்த 30.01.2021 அன்று ஆலமே ஃபனாவிலிருந்து ஆலாமே பகா அளவில் உயர்ந்தார்கள். இன்னா லில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஊன்!

அன்னாரது வாழ்க்கை குறிப்பை கனத்த இதயத்துடன் தர்கா இதழ் வாசகர்களுடன் பகிர்ந்து கொள்கிறோம்.

## பூர்வீகம் காயல் நகரம்:

முஹ்யித்தீன் அடிமை அவர்களது பூர்வீகம் கல்வியின் பட்டணமாம் வலிமார்களின் காயல்பட்டணம் ஆகும். அவர்களது முன்னோர்கள், அக்காலத்தே கும்மிடிப்பூண்டிக்கு அருகில் இருந்த, காயல்வாசிகள் குடிபெயர்ந்த காரணத்தால் காயலார்மேடு என காரணப்பெயரோடு அழைக்கப்பட்ட இடத்தில் வாழ்ந்து வந்தார்கள். அதன்பின் பெரியபாளையம் என்னும் ஊருக்கு இடம்பெயர்ந்தார்கள்.

இவ்வூரிலேயே 28.12.1931ல் ஜனாப் தாவூத் சாஹிப் அவர்களுக்கும், ஆமினா அம்மாள் அவர்களுக்கும் 15 பிள்ளைகளில் மூத்த மகனாக முஹ்யித்தீன் ஷாஹுல் ஹமீது என இரு நாதாக்களின் பெயர்களை ஒருங்கே பெற்ற, தன்னை முஹ்யித்தீன் அடிமை என அழைத்துக் கொள்வதில் பெருமை கொள்ளும் முஹ்யித்தீன் அடிமை அவர்கள் பிறந்தார்கள். பிற்காலத்தில் கும்மிடிப்பூண்டிக்கு குடிவந்தார்கள்.

அக்கால திண்ணைப் பள்ளியில் படித்த இவர்கள் சிறந்த தமிழ் பண்டிதராகவும், எழுத்தாளராகவும் விளங்கினார்கள். தனது ஹலாலான வருமானத்திற்காக அச்சகம் வைத்து நடத்தி வந்தார்கள். எல்லா மதங்களின் ஆன்மிக வாதிகளும் இவரை போற்றி வந்தார்கள்.

தன் 17 ஆம் வயதில் எழுத்துத் துறையில் ஈடுபட்ட இவர்கள் ஆன்மிக இலக்கியப் பணிகளை ஆற்றி வந்தார். அனைத்துச் சமய இறையுணர்வியல் இலக்கியச் சொற்பொழிவுகளைத் தொடர்ந்து பல ஆலயங்களிலும், பொது இடங்களிலும் நிகழ்த்தி வந்த இவர்கள் சென்னை வானொலியில் 100க்கும் மேற்பட்ட முறையும், தொலைக்காட்சியில் பலமுறையும் உரையாற்றியுள்ளார்கள்.

முஹ்யித்தீன் பிரபு ஆன்மிக இலக்கிய சங்கம், குணங்குடி மஸ்தான் ஆன்மிக இலக்கிய மன்றம், தமிழ்நாடு இறைகழல் மன்றம் ஆகியவற்றின் அமைப்பாளராகவும் அகில இந்திய சாயி சமாஜம், தமிழ்நாடு அனைத்துச் சிறு பத்திரிகையாளர் சங்கம் ஆகியவற்றின் நிர்வாகக்குழு உறுப்பினராகவும் இருந்து வந்துள்ளார்கள்.

1988ஆம் ஆண்டின் சிறந்த பத்திரிகையாளர் என்ற விருதை வி.ஜி.பி. நிறுவனமும், 1989ஆம் ஆண்டு இறைநேசச் செல்வர் என்ற விருதைத் தமிழ்நாடு ஆன்மிகப் பேரவையும் இவருக்கு வழங்கியுள்ளன.

தாய்மொழியான தமிழைத் தவிர, ஆங்கிலம், அரபி ஆகிய மொழிகளில் எழுத்தறிவு பெற்றிருந்த இவர், இதுவரை ஆன்மிகப் பேரரசர் முஹ்யித்தீன் பெருமான், இறை காதல், மதமும், மனித குலமும், சமயங்கடந்த சத்திய மூர்த்திகள், குணங்குடி கண்ட ஞானரதம், கீதை காட்டும் பாதை, திருவாசகத் தேன், அருட்பா அமுதம், இறையோடு உரையாடல் ஆகிய இலக்கியங்களை உருவாக்கியுள்ளார். சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபாடு கொண்டு காங்கிரஸ் கட்சியில் இணைந்து சேவையாற்றினார்கள். ஒருபோதும் தம்மை சுதந்திரப் போராட்ட தியாகி என அரசுகளிடம் போய் நிற்காத நாட்டுப்பற்று மிக்க சுயமரியாதைக்காரராக விளங்கினார்.

27ஆம் வயதில் பெருமானாரின் சுன்னத்தான நிக்காஹ்வில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டார்கள்.

அவர்களின் துணைவியார் ஃபாத்திமா அம்மா காதிரி ஆவார்கள். இவர்களுக்கு 7 பிள்ளைகள். 1. முஹ்யித்தீன் மஹ்மூதா, 2. முஹ்யித்தீன் கைருன்னிஸா, 3. ஜவ்ஹர் முஹ்யித்தீன், 4. பக்தாத் முஹ்யித்தீன். 5. முதல் ஷாஹ் முஹ்யித்தீன் வஃபாத் ஆகிவிட்டதால் 6. இரண்டாவதாக பிறந்தவரின் பெயரும் ஷாஹ் முஹ்யித்தீன். 7. முஹ்யித்தீன் நிஸா.

முஹ்யித்தீன் எஜமானின் தவபீடமான காயல்பட்டணம் மஹ்ளரதுல் காதிரிய்யா திருச்சபையில் உயர் முஹ்யித்தீன் எஜமானின் உருஸ் விழாவில் பலமுறை உரை நிகழ்த்தியுள்ளார்கள். மஹ்ளராவிற்கு வெளியே தெருவில் காலணிகளை கழற்றி விட்டுத்தான் உள்ளே செல்வார்கள்.

மஹ்ளரா அரபிக்கல்லூரியின் முதல்வர் மர்ஹூம் கலந்தர் மஸ்தான் ஹஜ்ரத் அவர்கள் இவர்மீது அன்பும் மரியாதையும் வைத்திருந்தார்கள். இருவரும் இணைந்தே பக்தாத் பயணம் மேற்கொண்டார்கள். மேலும் இவர்களுடன் பயணம் மேற்கொண்ட இராமநாதபுரம் முஹ்யித்தீன் நேசர் ஜனாப் ஸெய்யது

அப்துல் காதர் அவர்கள் உற்ற தோழராய் உடன் இருந்து எஜமான் முஹ்யித்தீன் ஆண்டகையின் திருவருளைப் பெற்றார்கள். அதுபோது கர்நாடக முஃப்தியாக அழைக்கப்பட்ட ஆலே நபி அவுலாதே கௌஸுல் அஃளம் மர்ஹூம் சையத் ஷாஹ் ஷம்ஷுல் ஹக் காதிரி அவர்கள் கஜனஸானி அல்பக்தாதி என சிறப்பு பட்டங்கள் கொடுத்து முஹ்யித்தீன் அடிமை அவர்களை கௌரவித்துள்ளார்கள்.

காயல்பட்டணம் குத்பியா மன்ஜிலில் பல முறை குத்பு நாயகத்தின் புகழுரை நிகழ்த்தியுள்ளார்கள். முஹ்யித்தீன் டி.வி மூலம் உலகெங்கும் அது அஞ்சல் செய்யப்பட்டது.

45 ஆண்டாக காலணிகளை போடவில்லை பின் பிள்ளைகள் வற்புறுத்தலின் பேரில் செருப்பணிந்து துறவு வாழ்க்கை மேற்கொண்டார்கள்.

ஒவ்வொரு வருடமும் ரபீயுல் ஆகிர் பிறை தொடங்கி ஜமாதில் அவ்வல் பிறை 10 – 15 வரை சுமார் 40 – 45 நாட்கள் தமிழகமெங்கும் சுற்றுப்பயணம் மேற்கொண்டு முஹ்யித்தீன் ஆண்டகையின் வாய்மை வரலாற்று உரை நிகழ்த்துவதும், குத்பிய்யத் மஜ்லிஸ் நடத்துவதும் என 40க்கும் மேற்பட்ட ஆண்டுகளாக சேவையாற்றியுள்ளார்கள்.

பொட்டல் புதூரில் இரவு 10:00 மணிமுதல் பஜ்ரு பாங்கு வரை எஜமான் ஆண்டகையின் வாய்மை வரலாற்று உரை நிகழ்த்துவார்கள்.

இவர்களின் முயற்சியால் இராமநாதபுரம் முஹ்யித்தீன் நேசர்களை ஒன்று சேர்த்து, குணங்குடி மஸ்தான் அப்பா அவர்களின் பிறந்த இடமான குணங்குடியில் மஸ்தான் அப்பாவிற்கு நினைவு மண்டபம் எழுப்பினார்கள். அதற்கு முழுமுதல் துணை நின்றவர்கள் இராமநாதபுரம் முஹ்யித்தீன் நேசர் ஜனாப் ஸெய்யது அப்துல் காதர் ஆவார்கள்.

நாகூர் ஷரீஃப் கடலுக்கு சென்று குத்பிய்யத்து நடத்தி கடலில் முழ்கி எழுந்து வருவார்கள். அதே போல் ரமளான் முதல் பிறை அன்று மஹாபலிபுரம், கோவளம், நெமிலி, ஆகிய தர்காக்களில் சென்று முக்கடலில் மூழ்கி வந்து, எஜமான் முஹ்யித்தீன் ஆண்டகையின் பிறந்த தினமான ரமலான் முதல் பிறை அன்றே நோன்பு நோற்றதை எடுத்து இயம்ப முதல் பிறை இஃப்தார் நேரத்தில் குழந்தைகளுக்கு பால் வழங்குவதையும், இரவு முழுக்க ராத்தீபு குத்பியத்து நடத்துவதையும் வழக்கமாக்கி இருந்தார்கள்.

## குணங்குடி மஸ்தான் அப்பாவின் கராமத்து

ஒவ்வொரு ஆண்டும் தான் பிறந்த டிசம்பர் 28 ஆம் தேதி அன்று, முஹ்யித்தீன் சதகம், அகத்தியர் சதகம், குருவணக்கம் முதல் 10 பாடல்கள் முதலியவற்றை வழமையாக ஓதிவந்தார்கள். இதற்கு காரணம் என்னவெனில்...

மூத்த மருமகனார் பிலால் முஹ்யித்தீன் அவர்களுக்கு திடீரென்று கண்பார்வை பறிபோய் விட மருத்துவரை அணுக கண் பார்வை மீளாது என ஸ்டான்லி மருத்துவமனையில் கூறிவிட அருகில் இருந்த குணங்குடி மஸ்தான் அப்பா தர்காவிற்கு சென்று மேற்படி பாடல்களை உருக்கமாக பாடி கௌதிய்யா ஸலவாத்து ஓதிக்கொண்டிருக்கும் போது கண்பார்வை கிடைத்து விட்டது என தகவல் வந்தது என்பதால் அதை ஓதுவதை வழமையாக கொண்டிருந்தார்கள்.

ஒவ்வொரு மாதமும் பிறை 1 அன்று வீட்டில் குத்பிய்யத்து ஓதும் முன் குருவணக்கம் முதல் 10 பாடல்கள், அஸ்மாவுல் கௌஸுல் அஃளம், ஜீலானை நோக்கி 11 திருவடிகள் எடுத்து வைத்து, யாகுத்பா பாமாலை ஓதி, 8 ரக்அத் நஃபில் தொழுது குத்பிய்யத்தை துவங்குவார்கள். அன்று ஃபாத்திஹா ஓதி அன்னதானம் செய்வார்கள்.

## முஹ்யித்தீன் மாளிகை தைக்கால்

இவற்றுக்கெல்லாம் ஒரு நிரந்தர ஸ்தலம் வேண்டும் என்பற்காக முஹ்யித்தீன் மாளிகை என்னும் ஒரு தைக்காலை நிறுவினார்கள்.

தன் குடும்பத்தின் சொந்த செலவில் 22 செண்ட் நிலம் பள்ளிக்காகவும், 8 செண்ட் கபரஸ்தானுக்காவும், 5 செண்ட் மதரஸா நடத்த வக்ஃப் அலல் அவ்லாத் பரம்பரை முத்தவல்லியை ஏற்பாடு செய்துள்ளார்கள்.

20 ஆண்டுகளாக ரோஜாவின் ராஜா என்ற இதழை நடத்தியபின் ஆன்மிக இன்பம் என்ற பத்திரிக்கையை, நடத்தினார்கள். யாகுத்பா பாமலை வெளியீடு, அஸ்மாவுல் கௌஸுல் அஃளம், குணங்குடி அப்பா பாடல்கள் வெளியீடு என எழுத்து துறையில் பல சேவைகள் ஆற்றியுள்ளார்கள். 1985ல் வெளியான பத்திரிக்கை நடத்துவது எப்படி என்ற ஜெர்னலிஸம் புத்தகத்தில் இவர்களின் வாழ்க்கை வரலாறு, பாடமாக வைக்கப்பட்டுள்ளது.

முஹ்யித்தீன் ஆண்டகையின் நினைவில் தோய்ந்த இவர்கள் அவர்களின் இவ்வுலக வயதான 91ஆம் வயதிலேயே தானும் வஃபத்தானது ஓர் அற்புதமே! என்பதும் நாகூர் காதிர் வலி நாயகத்தின் புனித உருஸ் மாதமான ஜமாதுல் ஆகிர் மாதமே கிட்டியுள்ளது என்பது இஸம் ப முஸம்மா என்பார்களே அதுபோல் முஹ்யித்தீன் ஷாஹுல் ஹமீத் முஹ்யித்தீன் அடிமை என்ற பெயருக்கு பொருத்தமாக அவரின் தொடக்கமும் முடிவும் அமைந்துள்ளது என்பதை வாசகர்கள் இங்கே சீர்தூக்கி பார்க்க வேண்டும்.

அன்னாரது நல்லடக்கம் 31.01.2021 லுஹருக்கு பின் முஹ்யித்தீன் மாளிகை தைக்காலின் அருகிலேயே அவரின் பூர்வீக சொந்த இடத்திலேயே நல்லடக்கம் செய்யப்பட்டார்கள்.

எப்படி முஹ்யித்தீன் ஆண்டகையின் நேசத்தைப் பற்றிப்பிடித்து தன் இம்மையை முஹ்யித்தீன் அடிமை அவர்கள் கழித்தார்களோ அதைப் போன்றே அவரது மறுமையும் அமைய துஆ செய்யும்படி வாசகர்களை கேட்டுக்கொள்கிறோம். ஆமின்!

# மஜ்லிஸ் உலமாயி அஹ்லிஸ் ஸுன்னத் வல் ஜமாஅத் செயற்குழு கூட்டமும் - தீர்மானங்களும் செய்திக் கட்டுரை

31.1.2021ல் மஜ்லிஸ் உலமா செயற்குழு கூட்டம் காயல்பட்டணம், காதிரிய்யா கொடிமர சிறுநெய்னார் பள்ளிவாசல் வளாகத்தில் நடைபெறும் என்ற அழைப்பைக் கண்டோம். அதில் குறிப்பாக...

1. நூரிஷாஹ் கூட்டத்தின் பெருகிவரும் குழப்பங்களும், அதற்கான தீர்வுகளும்,

2. தரீக்காக்களில் வஹ்ஹாபிய ஊடுருவல்களும் தீர்வுகளும் எனும் பிரச்சினைகள் பற்றி மஜ்லிஸ் ஒன்றுகூடி தக்க வாத பிரதிவாதங்கள் செய்து ஆய்வின் முடிவில் தீர்மானமாக நிறைவேற்றப்படும் என அழைப்பிதழில் கூறப்பட்டிருந்தது. நாமும் செய்தி சேகரிக்கும் நோக்கோடு திருச்செந்தூர் விரைவு வண்டியில் பயணப்பட்டு காலை 7:00 மணிக்கு ஆஜரானோம்.

குளித்து முடித்து தயாராகி ஏற்பாட்டாளர்கள் மூலம் குளம் ரிழ்வான் அவர்கள் வழங்கிய சிற்றுண்டியை உண்டு அவுலியாக்களின் புனிதப் பட்டினமாம் காயல்பட்டினத்தில் அவுலியாக்களின் ஜியாரத்துகளுக்கு ஆஜரானோம். இம்முறை கூடுதலாக நமது மஜ்லிஸின் வாழ்நாள் தலைவராய் இருந்து சிறப்புடன் நடத்திய ஷைகுத் தரீகத் மௌலானா மௌலவி முஹம்மத் அலி எஸ்.எம்.ஹெச்.முஹம்மத் அலி சைபுத்தீன் ரஹ்மானி காதிரி ஸூபி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களின் அழகிய கும்பதுடன் கூடிய தர்காவை ஜியாரத்து செய்தபோது அவர்கள் அடிக்கடி கூறும் சொற்றொடரான நமது அவுலியாக்களின் தர்காக்களில் பூவும் சந்தனமும் மணமாக மணக்க, பச்சைப் போர்வை அழகாக காட்சித்த தர நமது வலிமார்களின் சன்னிதானங்கள் உள்ளும் புறமும் சொர்க்கத்தின் சோலைகளாக காட்சியளிக்கின்றன.

அதேவேளையில் வஹ்ஹாபிகளின் கப்ருகள் உள்ளே அஜாபு இருப்பதைப்போலவே முள்ளும் காடுமாக இருக்கிறன என்பார்கள்.

ஸலாம் பைத்துகள் ஓதி ஃபாத்திஹா முடித்து தர்காவை விட்டு கீழே இறங்கி வந்த போது காயல்பட்டணத்தில் வஹ்ஹாபிய மத சித்தாந்தங்களுக்கு எந்த வித இடமும் கொடுக்காமல் இறுதிவரை ஸூஃபியாக்களின் சொர்க்க நிழலில் வாழ்ந்து மறைந்த, எல்லோராலும் மஹ்மூது காக்கா என்று அழைக்கப்படுகின்ற அன்னவர்களின் கப்ரையும் ஜியாரத்து செய்து துஆ கேட்டு, முவ்வொளிகள் அடங்கிய காதிரிய்யா கொடிமர சிறுநெய்னார் பள்ளிவாசல் ஜியாரத்துகளை முடித்து வளாகத்தை வலம் வந்த போது நமது தர்கா இதழின் தேவ்பந்திய தப்லீக் வஹ்ஹாபிய எதிர்ப்பு பேனர்களும், ஸூஃபியாக்கள், ஷைகுமார்களின் நூரானிய்யத்தான கம்பீர புகைப்படங்களும், வலிமார்களின் தர்கா நிழற்படங்களும், சிறப்பாய் காட்சியளித்தன. 10:30 மணிக்கு மஜ்லிஸ் உலமாயி அஹ்லிஸ் ஸுன்னத்தி வல் ஜமாஅத் கூட்டம் துவங்கியது.

மஜ்லிஸின் முதுபெரும் தலைவரும் ஸ்தாபக உறுப்பினர்களில் ஒருவருமான ஷைகுல் ஹதீஸ் மௌலானா மௌலவி கே.என். சையத் நூஹ் முஹ்யித்தீன் ஆலிம் உலவியு உடன்குடி அவர்கள் தமது வயோதிகத்தின் காரணமாக உடல் நிலையை அனுசரித்து மஃரிபுக்குப் பின் நடைபெறும் மஜ்லிஸின் பொதுக் கூட்டத்தில் கலந்து கொள்வதாக தெரிவித்திருந்தார்கள். அதே போல் மஜ்லிஸின் கொள்கை பரப்புச் செயலாளர் மௌலானா மௌலவி ஹாபிள் முஹம்மத் காஸிம் மஹ்ளரி ரப்பானி கலீஃபயே ஹல்லாஜியா அவர்கள் நாகூர் ஷரீஃபில் இருந்து தவிர்க்க முடியாத காரணங்களால் வர இயலவில்லை என தெரிவித்துவிட்டார்கள்.

### கூட்டத்தின் துவக்கம்

துணைத் தலைவர்களான மௌலவி எம்.எஸ்.ஏ.முஹம்மது அபூபக்கர் ஹம்மாத் மஹ்ளரி ஸூபி காதிரி அவர்களும் மௌலானா மௌலவி தஸ்தகீர் ஹஜ்ரத் அவர்களும், மஜ்லிஸின் உறுப்பினர்களான இன்னபிற உலமாக்கள் முன்னிலை வகிக்க கிராஅத்தும் நபிகீதமும் இனிதே முழங்கப்பட கூட்டம் துவங்கியது.

மௌலவி சையத் வஜீஹுன்னகி சக்காப் சாஹெப் அவர்கள் மஜ்லிஸிஸ் 1984ல் ஸ்தாபிதம் செய்யப்பட்ட நோக்கமும் இதுவரை நடத்தப்பட்ட கூட்டங்கள், ஃபத்வாக்கள், தீர்மானங்கள் போன்றவற்றை சுருக்கமாகவும் அதே வேளையில் தெளிவாகவும் புரிந்து கொள்ளும்படி விளக்கம் தந்து இன்றைய கூட்டத்தின் முக்கிய நோக்கமான தரீக்காக்களில் வஹ்ஹாபிய ஊடுருவல்களும் குறிப்பாக தமிழகத்தில் நூரிஷாஹ் தரீக்கா தேவ்பந்து வஹ்ஹாபியத்தை ஆதரித்து வெளியில் காட்டிக்கொள்ளாமல் ஏற்படுத்திவரும் குழப்பங்களுக்கு தக்க தீர்வு காண வேண்டும் என்ற வரைவு தீர்மானத்தை முன்மொழிந்ததோடு 17.02.1995ல் தஞ்சையில் மஜ்லிஸ் கூடிய போது நூரிஷாஹ் தரீக்காவைப் பற்றிய சர்ச்சை விவாதிக்கப்பட்ட போது...

மௌலானா மௌலவி ஷேக் அப்துல்லாஹ் ஜமாலி மட்டும், நூரிஷாஹ் தரீக்காவை வஹ்ஹாபிகளை ஆதரிக்கும் தரீக்கா என்று அறிவிக்கக் கூடாது என்றும் நாம் நேரடியாக லால்பேட்டை சென்று பைஜிஷாஹ்விடம் தெளிவான பதில் பெற்று அறிவிக்கலாம் என்றும் கூறினார்கள்.

அதை செவியுற்ற அனைத்து உலமாக்களும் நிராகரித்ததோடு, அன்றைய பொதுச் செயலாளராக இருந்த மௌலானா மௌலவி ஹாபிள் எப்.எம். இப்ராஹீம் ரப்பானி பாக்கவி அவர்கள் மிகத் தெளிவாக, நான்! பைஜிஷாஹ் அவர்களிடமே விளக்கமும் கேட்டிருக்கிறேன்...

அவர் குஃப்ரு ஃபத்வா வழங்கப்பட்ட மௌலவி அஷ்ரப் அலி தானவியை ரஹ்மதுல்லாஹி அலைஹி என்றும், பன்னூற்கள் எழுதிய மாமேதை என்றும் புகழ்ந்து பேசினார்.

தவிர 1986ல் தரீகத் மாநாடு சென்னையில் நடந்தபோது என்னை பேச்சாளராக அழைத்திருந்தார்கள். நான் மேடைக்கும் அழைக்கப்பட்டேன்! மைக் முன் சென்று பேசத் துவங்கும் முன் அறிவிப்பாளராக இருந்த பைஜிஷாஹ் அவர்கள் என் ஜிப்பாவை பிடித்து இழுத்து இஷாரா காட்டி அழைத்து மௌலானா நீங்கள் எதைப் பற்றியும் பேசலாம். ஆனால் அஷ்ரஃப் அலி தானவியைப் பற்றி ஏதும் கூறக் கூடாது என்றார். அதை செவிமடுத்த நான் இது தரீக்கா மாநாடு தானே! நான் அஷ்ரஃப் அலி தானவி வஹ்ஹாபி என்பதைப் பற்றி மட்டுமே பேசுவேன் என்றார். அப்படியானால், உங்களுக்கு அனுமதி இல்லை என்று கூறிவிட்டார்கள்.

இந்நிகழ்வு, அன்று மேடையில் இருந்த அத்தனை பேர்களுக்கும் நன்றாகத் தெரிந்த ஒன்று. குறிப்பாக தரீக்கா மாநாட்டின் அமைப்பாளரான ஆலி ஜனாப் கனீ சிஷ்த்தி அவர்கள் நன்றாக அறிவார்கள். இதைக் கேட்ட பின்பும் மௌலானா மௌலவி ஷேக் அப்துல்லாஹ் ஜமாலி அவர்கள் பிடிவாதமாக இருந்த போது, நமது மஜ்லிஸின் அப்போதைய தலைவராக இருந்த மௌலானா மௌலவி அஷ்ஷைகு எஸ்.எம்.ஹெச்.முஹம்மத் அலி சைபுத்தீன் ரஹ்மானி காதிரி ஸூபி அவர்கள்....

மௌலானா ஷேக் அப்துல்லாஹ் ஜமாலி அவர்களே! தற்போது இந்த சபையின் உலமாக்கள் அனைவரின் ஏகோபித்த கருத்துப்படி நூரிஷாஹ் தேவ்பந்து வஹ்ஹாபிய ஆதரவு தரீக்கா என்ற தீர்மானத்தை நிறைவேற்றிவிடுகின்றோம் மௌலானா நீங்களும், மௌலானா காஸிம் மஹ்ளரி ஹஜ்ரத் அவர்களும் நேரடியாகச் சென்று எழுத்துப்பூர்வமான தேவ்பந்து வஹ்ஹாபிகள் பற்றிய பதிலை சமர்ப்பித்தால் அதன் படி அறிவிப்பு வெளியிடுகின்றோம்! என்று கூறி முடித்தார்கள்.

இதுவரை எந்த பதிலும் வரவில்லை என்பது வேறு விஷயம்! மறுபடியும் அதே நூரிய்யா தரீக்காவின் குழப்பம் தற்போது திரும்ப முளைத்ததால் மஜ்லிஸில் பின்னர் எடுக்கப்பட்ட தீர்மானங்களை திரும்ப நினைவூட்டுகின்றோம்.

17.02.1995 அன்று மஜ்லிஸ் உலமாயி அஹ்லிஸ் ஸுன்னத் வல் ஜமாஅத் (தமிழ்நாடு) தீர்மானம் இப்படி மக்களை எச்சரிக்கிறது.

தரீக்கா என்னும் போர்வையில் தப்லீக் ஜமாஅத்தினர் செய்யும் துரோக செயல்களை தடுப்பதென்றும், இந்த சூழ்ச்சியிலிருந்து உம்மத்தே முஹம்மதியாவை காப்பதென்றும், காபிர் என தீர்ப்பளிக்கப்பட்ட மௌலவி அஷ்ரஃப் அலி தானவி, ரஷீத் அஹ்மத் கங்கோஹி போன்ற வஹ்ஹாபிகளை ரஹ்மதுல்லாஹி அலைஹி எனக் கூறி தன்னை ஷெய்குமார்களாக சொல்லிக் கொண்டு தரீக்காவாதிகள் போல் திரியும் மௌலவி எம்.ஜே. முஹம்மது கமாலுத்தீன் பாகவி (ஆரணி) அவர்களையும் அவரது கலீபாக்களையும் வழிகேடர்கள்! என்று இக்கூட்டம் தீர்மானிக்கிறது. மேலும் இத்தகைய ஷைகுமார்களிடம் பெறப்பட்ட பைஅத் செல்லாது என்றும் பைஅத் வாங்கியவர்கள் தமது முரண்பட்ட ஷைகுமார்களை விட்டும் உடனடியாக விலக வேண்டும் என்றும் இச்சபை கேட்டுக்கொள்கிறது.

இன்னும் இதே உலமா சபை 08.08.2006ல் நிறைவேற்றிய தீர்மானத்தின் சாரமிது.

டில்லி ஹஜ்ரத் நிஜாமுத்தீன் அவுலியா பாரம்பரியத்தைச் சார்ந்த காஜா ஹஸன் நிஜாமி அவர்கள் எழுதிய இஃப்திராகே பைனல் முஸ்லிமீன்கே அஸ்பாப் எனும் நூலில், வஹ்ஹாபிகள் கூட தரீக்காவில் புகுந்து முரீது கொடுக்கிறார்கள், அவர்கள் தான் தேவ்பந்திகள்! என்கிறார்கள்.

நூரிஷாஹ் என்பவரும் அவரை சார்ந்து தம்மை கலீஃபாக்கள் என கூறிக் கொள்வோரும் அந்தரங்கமாகவும், சில வேளைகளில் வெளிப்படையாகவும் தேவ்பந்திய தப்லீக் வஹ்ஹாபிய தலைவர்களான அஷ்ரப் அலி தானவி, ரஷீத் அஹ்மத் கங்கோஹி போன்றவர்களை ஆதரிக்கிறார்கள்.

ஹகீகதே கிதாபவி வக்புல் இக்லாஸ் இஸ்தான்புல் துருக்கி நாட்டை சேர்ந்த ஹஜ்ரத் ஹுஸைன் ஹில்மி என்பவர் நூரிஷாஹ் தரீகா வழிகெட்டது என்ற நூலை வெளியிட்டுள்ளார்.

சமஸ்த கேரளா உலமா சபை 30.07.1996 அன்று சுன்னத் வல் ஜமாஅத் கொள்கைகளுக்கு மாற்றமான நூரிஷாஹ் தரீக்காவை விட்டு பொதுமக்கள் ஒதுங்கி இருக்கும்படி வேண்டுகோள் விடுத்துள்ளது.

அஸ்ராரே கலிமதுத்தய்யிபா என்ற நூலில் நூரிஷாஹ் அஷ்ரப் அலி தானவியை புகழ்ந்து தள்ளுகிறார்.

இவையெல்லாவற்றையும் விட நூரிஷாஹ் ஜாமியா இலாஹிய்யாத்தே நூரிய்யா என்ற மதரஸாவை ஹைதரபாத்தில் துவங்கிய போது தேவ்பந்து ஸ்தாபகரின் பேரரான மௌலானா காரி தைய்யிப் சாஹிப் தேவ்பந்தியை வைத்தே திறப்புவிழா நடத்தினார் என்றால் நூரிஷாஹ் தரீக்கா எதை சார்ந்தது என்பது தெளிவாகிறது.

பைஜிஷாஹ் 19 ஆண்டுகள் தப்லீகில் சுற்றியதும், தேவ்பந்திகளை மிகப் புகழ்ந்தும் நூருன் நூர் என்ற நூலில் 11வது பக்கத்தில் எழுதியிருப்பதும் வஹ்ஹாபிய அடையாளங்களின் எச்சங்களே!

ஆகவே இந்த ஆதாரங்களால் நூரிஷாஹ்விடம் பெற்ற பைஅத்தும் - கிலாபத்தும் செல்லாது என மஜ்லிஸ் உலமாயி அஹ்லிஸ் ஸுன்னத்தி வல் ஜமாஅத் தீர்மானம் நிறைவேற்றியுள்ளது.

- (தர்கா இதழ் ஜுலை - 2009)

இந்த செயற்குழு கூட்ட விவாதத்தில் கலந்து கொண்ட உலமாக்களில் மௌலானா மௌலவி முஹம்மத் அலி பாக்கவி ஹஜ்ரத் அவர்கள் மேலும் தெளிவான கருத்துகளுக்காக தன்னுடைய விளக்கத்தை முன்வைத்தார்கள். தேவ்பந்து துவங்கப்பட்ட போது வஹ்ஹாபிய ஆதரவு நிலை ஏற்படவில்லை, ஆனால் பிற்காலத்தில் வந்த ரஷீத் அஹ்மத் கங்கோஹியும் அஷ்ரப் அலி தானவியும் வஹ்ஹாபிய கொள்கைகளை ஆதரித்தனர் என்றார்கள்.

மௌலவி எம். சையத் அஹ்மத் லத்தீபி எம்.ஏ. தர்கா இதழ் ஆசிரியர் அவர்கள் அதற்கு பதில் உரையாக தேவ்பந்து என்பது ஒரு சிற்றூர் அதில் வாழ்ந்த பொதுமக்களுமே சுன்னத் வல் ஜமாஅத்தைச் சார்ந்தவர்கள் அங்கு வஹ்ஹாபிய சித்தாந்தத்தை விதைத்து முஸ்லிம்களை பிளவுபடுத்தப்பட வேண்டும் என்ற நோக்கத்தின் அடிப்படையிலேயே காஸிம் நானோத்தவி அனுப்பப்பட்டார். இது ஆங்கிலேயர்களின் டிவைடு அண்டு ரூல் பாலிஸி ஆகும். எனவே தேவ்பந்து மதரஸாவின் முதல் கோணல் முற்றும் கோணல் என்கிற ரீதியில் ஆரம்பம் முதல் வஹ்ஹாபியர்களாகவே இருந்து வந்திருக்கிறார்கள் என விளக்கமளித்தார்கள்.

மௌலானா மௌலவி தஸ்தகீர் ஹஜ்ரத் அவர்கள் தன் கருத்தை முன் வைத்த போது ஆமிர் கலீமி ஷாஹ் அவர்கள் தப்லீக்வாதிகளை வஹ்ஹாபிகள் என்றுதான் கூறியிருக்கிறார்களே என்று சென்னார்கள்.

அதற்கு நூரிஷாஹ்வின் கலீஃபாவாகிய ஆமிர் கலீமிஷாஹ் அவர்கள் தப்லீக் வஹ்ஹாபிகளை நிராகரித்திருக்கலாம், ஆனால் தேவ்பந்தின் அஷ்ரஃப் அலி தானவி ரஷீத் அஹ்மத் கங்கேஹி காஸிம் நானோத்தவி, கலீல் அஹ்மத் அம்பேட்வி போன்ற குஃப்ரு ஃபத்வா வழங்கப்பட்ட உலமாக்களில் அஷ்ரஃப் அலி தானவியை ஆதரிப்பது கண்கூடு.

அதிலும் உருது தமிழ் முஸ்லிம்கள் என்ற நிலையில் தப்லீகர்களை அவர்கள் நிராகரிப்பதும், பைஜிஷாஹ் 17 ஆண்டுகள் தப்லீகில் புடம்போட்ட தங்கமாக வந்ததும் நூரிஷாஹ் கலீஃபாக்களின் முரண்பட்ட வஹ்ஹாபிய ஆதரவு நிலைகள் அல்லவா? என்று முஹம்மத் ஷரீஃப் ஸூபி காதிரி அவர்கள் விளக்கம் அளித்தார்கள்.

எனவே நூரிஷாஹ் கலீஃபாக்களின் ஆமிர் கலீமி ஷாஹ், பைஜி ஷாஹ், ஜுஹூரி ஷாஹ், கிலீமி ஷாஹ், கதீரி ஷாஹ், நிஜாமி ஷாஹ் இன்னும் அவர்களைத் தொடர்ந்த பிலாலி ஷாஹ், அன்வாரி ஷாஹ் அனைத்து கலீஃபாக்களும் தரீக்காவும் தேவ்பந்து அஷ்ரப் அலி தானவி வஹ்ஹாபிய குட்டையில் ஊறிய மட்டைகளே! என்பது தெளிவாகிறது.

மௌலானா மௌலவி தாஜுத்தீன் அஹ்ஸனி ஹஜ்ரத் அவர்கள் கூறும் போது குஃப்ரு பத்வா வழங்கப்பட்டதில் நமக்கு கருத்து பேதம் உள்ளது என்று சொன்னபோது இந்த மஜ்லிஸ் உலமாயி அஹ்லே ஸுன்னத் வல் ஜமாஅத் ஷைகுமார்கள் சங்கை நிறைந்த உலமா பெருமக்களால் நிறுவப்பட்டபோதே அஃலா ஹஜ்ரத் அஜீமுல் பரகத் அவர்களின் தலைமையின் கீழ் பரேல்வி, பதாயூன், ஃபரங்கிமஹல், சூரத், ஹைதராபாத், மதராஸ் மாகாணம், குஜ்ரான்வாலா, ஒருங்கிணைந்த இந்தியாவின் உலமா பெருமக்கள் அரபு தேசத்து உலமாகள் என அத்தனை பேர்களும், தேவ்பந்து வஹ்ஹாபிகளான குறிப்பிட்ட உலமாக்கள் மீது குஃப்ரு பத்வா வழங்கியுள்ளதை ஏற்றுக் கொண்டவர்கள்கள் தான். தமிழக ஜமாஅத்துல் உலமா தேவ்பந்து வஹ்ஹாபிகளை ஆதரித்ததால் தான் இந்த மஜ்லிஸ் உலமா குப்ரு பத்வா வழங்கப்பட்டது சரிதான் என்று ஆதரவு தெரிவித்த உலமாக்களை மட்டும் கொண்டே ஆரம்பிக்கப்பட்டது.

தற்போது புதிதாக... நூரிஷாஹ் தரீக்கா வஹ்ஹாபிய தரீக்கா அல்ல என்று முழு பூசணிக்காயை சோற்றில் வைத்து புதைக்கும் முயற்சியாக ஆரம்பிக்கப் பட்டுள்ள பித்னா ஃபஸாது குழப்பத்தை மக்களுக்கு எடுத்துக் காட்டிட நூரிஷாஹ் தரீக்கா தேவ்பந்து வஹ்ஹாபிகளின் ஆதரவு தரீக்கா தான் என்பதற்கு பழைய தீர்மானங்களுக்கு மேலும் வலுவான ஆதாரத்தைச் சேர்க்கும் விதமாக, நூரிஷாஹ்வால் ஹைதரபாத்தில் நிறுவப்பட்ட ஜாமிஆ இலாஹியாத்தே நூரிய்யா மதரஸாவின் கல்வெட்டில் தாருல் உலூம் காஸிமிய்யா - தேவ்பந்து வஹ்ஹாபிய மதரஸாவின் ஸ்தாபகரும், குஃப்ரு பத்வா வழங்கபட்டவருமான மௌலவி காஸிம் நானோத்தவியின் பேரரான மௌலவி காரி தையப் தேவ்பந்தியை அழைத்துத் தான் மதரஸாவை திறந்து வைக்கப்பட்டுள்ள ஆதாரம் கிடைத்துள்ளது. அதை நேரில் சென்று பார்த்தவர்கள் புகைப்படம் எடுத்து சமூக வலைதளங்களில் வெளியிட்டதும் பேனாராக உலமாக்களுக்கு காண்பிக்கப்பட்டது.

ஆகவே இந்த கருத்து பரிமாற்றங்களுக்குப் பின் ஏகமனதாக கீழ்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## தீர்மானங்கள்

1. புனித ஹரமைனுஷ் ஷரீஃபைன் மற்றும் இந்தியாவின் உலமா பெருமக்களால் குஃப்ரு ஃபத்வா வழங்கப்பட்ட வழிகேடர்களான

1. குலாம் அஹ்மத் காதியானி
2. காஸிம் நானோத்தவி
3. கலீல் அஹ்மத் அம்பேட்வி
4. அஷ்ரஃப் அலி தானவி
5. ரஷீத் அஹ்மத் கங்கோஹி

ஆகியோர்களும் அவர்களைப் பின்பற்றுவோரும் காஃபிர்கள் என்பதில் சந்தேகம் இல்லை.

2. நூரி ஷா ஹைதராபாத்தில், ஜாமிஆ இலாஹியாத்தே நூரியா என்ற மதரஸாவை, வழிகெட்ட தேவ்பந்து வஹ்ஹாபி மதரஸாவை ஸ்தாபித்த காஸிம் நானோத்தவியின் பேரரான மௌலவி காரி தையப் காஸிமியை வைத்து நடத்திய திறப்பு விழா கல்வெட்டு ஆதாரம் (பார்க்க தர்கா இதழ் ஜனவரி - 2021) கிடைத்துள்ளபடியாலும், நூரிஷா மதரஸாவின் பைலாவில் மதரஸாவை தொடர்ந்து நடத்தமுடியாமல் போனால் தேவ்பந்து அதை தத்தெடுத்துக்கொள்ளும் என்னும் ஷரத்து உள்ளது என்ற செய்தி தெரியவந்திருப்ப தாலும் ஹைதராபாத் நூரிஷா தரீகாவினருக்கும், வழிகேடர்களான தேவ்பந்து வஹ்ஹாபிய முல்லாக்களுக்கும் உள்ள தொடர்பு வெளிச்சமாகியுள்ள படியாலும், மேலும் நூரிஷா தரீக்காவின் கொள்கை கோட்பாடுகள் ஸுன்னத் வல் ஜமாஅத் அகீதா கொள்கைகளுக்கு மாறுபட்டு இருப்பது தெரியவந்திருப்பதாலும் நூரிஷா தரீகாவும் வழிகேடு என்பது நிரூபணமாகிறது.

3. மேற்கண்ட வழிகேடர்கள் வழிவரும், அல்லது அவர்களை பின்பற்றும் அல்லது அவர்களை பரிந்து பேசும், இயக்கங்கள், அமைப்புகள், மற்றும் நூரிஷா மற்றும் அதன் கிளை தரீகாவினர் மற்றும் அவர்களை ஆதரித்து தங்களை சுன்னத் வல் ஜமாஅத் ஆலிம்கள் என கூறிக்கொள்ளும் நபர்களை விட்டும் இஸ்லாமிய அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத் பொதுமக்கள் விலகி இருக்க வேண்டும்.

4. ஸுன்னத் வல் ஜமாஅத் அகீதா அடியொற்றி வாழ்ந்து காட்டி வழிநடத்திய வலிமார்கள், நாதாக்களின் தர்காக்கள், தைக்கால்கள், ஆஸ்தானாக்களில் சுன்னத் வல் ஜமாஅத் வழிமுறைகளான மீலாது, மௌலிது, உருஸ், கந்தூரி விழாக்கள் கொண்டாடுவது, ஃபாத்திஹா ஓதுவது, திக்ரு மஜ்லிஸ் நடத்துவது, நஅதே ஷரீஃப் என்னும் நபி கீதம் படிப்பது என தரீக்கா வேடம் தரித்து உள்ளே நுழைய முற்படும் ஆரணி கமாலுத்தீன் மற்றும் தேவ்பந்திய தரீக்காவினர் மற்றும் நூரிஷா மற்றும் அதன் கிளை தரீக்காவினரிடமிருந்தும் கவனமாக இருக்கும் படியும் முத்தவல்லிகள், ஹக்தார்கள், மக்கான்தார்கள், சாபுமார்கள், தைக்கால் நிர்வாகிகள், லெப்பைமார்களை இச்சபை வேண்டுகோள் விடுக்கிறது.

5. தமிழக ஜமாஅத்துல் உலமாவில், குஃப்ரு பத்வா வழங்கப்பட்ட தேவ்பந்திய தப்லீக் வஹ்ஹாபிய தலைவர்களை ஆதரிக்கும் பலர் ஊடுருவி விட்ட காரணத்தினால்தான் ஸுன்னத் வல் ஜமாஅத் அகீதா உலமாக்களால் மஜ்லிஸ் உலமாயி அஹ்லிஸ் ஸுன்னத் வல் ஜமாஅத் துவக்கப்பட்டது. எனவே இப்போது இல்லை என்றால் எப்போதும் இல்லை என்ற உறுதியான நிலைப்பாட்டுடன் மஜ்லிஸின் ஆரம்ப நோக்கத்தை கருத்தில் கொண்டு தேவ்பந்திய வஹ்ஹாபிய வழிகேடர்களை பெரும்பான்மையாகக் கொண்ட தமிழக ஜமாஅத்துல் உலமா மற்றும் இன்ன பிற வஹ்ஹாபிய அமைப்புகளைவிட்டும் ஸுன்னத் வல் ஜமாஅத் உலமாக்கள் தங்களை விடுவித்துக் கொள்ளும்படி இச்சபை கேட்டுக்கொள்கிறது.

மேற்படி தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டதன் பின் மினிட் புத்தகத்தில் கையொப்பமிட்ட சில உலமா பெருமக்களின் பெயர்கள்...

1.எம்.ஏ.எஸ்,அபூபக்கர் ஹம்மாத் ஹஜ்ரத், 2.ஸெய்யிது அப்துர் ரஹ்மான் பாக்கவி தங்கள் ஹஜ்ரத், 3. ஏ.நாகூர் மீரான் பாஜில் பாக்கவி ஹஜ்ரத், 4.எம்.சையத் ரியாஸுத்தீன் ஹஜ்ரத், 5.கே.எம்.ஏ.உமர் ஃபாரூக் அஃழம் ஹஜ்ரத், 6.முஹம்மது அன்வரி ஹஜ்ரத், 7.ஷுஐபு ரஹ்மான் அஹ்ஸனி ஹஜ்ரத், 8.முஹம்மத் இம்ரான் அஹ்ஸனி ஹஜ்ரத், 9.ஏ.முஹம்மத் அஸாருத்தீன் மஹ்ளரி ஹஜ்ரத், 10.எம்.இஸட்.முஹம்மது அப்துல் காதிர் மஸ்லஹி ஹஜ்ரத். 11.எம்.நிஜாமுத்தீன் ஃபாஜில் அஹ்ஸனி ஹஜ்ரத், 12.எம்.கே.திஹ்யத்துல் கல்பி ஜமால் மன்பயீ ஹஜ்ரத், 13.ஏ.முஹம்மது சுல்தான் மிஸ்பாஹி ஹஜ்ரத்,14.கத்தீப் ஏ.பி.மக்தூம் முஹம்மது மஹ்ளரி ஹஜ்ரத், 15.எஸ்.எம்.முஹம்மது ஹம்ஜா ஸமதானி ஹஜ்ரத், 16.எம்.ஏ.காஜா முகைதீன் கௌஸி ஹஜ்ரத், 17.எஸ்.முஹம்மத் அலி நூரி ஹஜ்ரத், 18.கே.ஏ.ஜாஸிர் மஹ்ளரி ஹஜ்ரத், 19.கே.முஹம்மது இப்ராஹீம் ஸூபி ஹஜ்ரத், 20.ஏ.தாஜுத்தீன் ஜமாலிஹஜ்ரத், 21.எம்.எஸ்.இ.முஹம்மத் அலி பாக்கவி ஹஜ்ரத், 22.எல்.முஹம்மத் ஷரீஃப் ஸூஃபி ஹஜ்ரத், 23.ஏ.எம்.ஏ.மன்ஸூர் ஆலிம் கௌஸி ஹஜ்ரத் 24.காஜா ஆரிஃப் பில்லாஹ் ரப்பானி ஹஜ்ரத் 25.ஜே.ஷாஜஹான் கௌஸி ஹஜ்ரத், 26.எம்.ஐ.அப்துர் ரஹீம் உலவிய்யு ஹஜ்ரத்.

மஜ்லிஸில் கலந்து கொண்ட ஸுன்னத் வல் ஜமாஅத் பொதுமக்களின் சில பெயர்கள்...

1. சையத் மத்தீன் அஹ்மத் சக்காப் தஅஜீம் தரக் காதிரி ஷுத்தாரி, 2.சையத் கலீமுல்லாஹ் ஷாஹ் சிஷ்த்தியுல் காதிரி, 3.முஹம்மத் உஸ்மான் மோத்தி சேட் காதிரி ரப்பானி, 4.அப்துல் அஜீஸ் உருது முன்ஷி, 5.ஐ.மொய்தீன், 6.கே.முஹம்மது சுல்தான் ரப்பானி, 7.எம்.சையத் ஜைனுத்தீன் ஹக்கானி சக்காப், 8.வெ.மக்தூம் அப்துல் காதர், 9.பி.காதர் சுலைமான், 10.எம்.எஸ்.மஹ்மூத் ரஜ்வி.11.எஸ்.எம்.ஷாஹுல் ஹமீத், 12.கே.ஏ.எம்.உத்மான், 13.எஸ்.எம்.பி.மஹ்மூத் தீபி, 14.எம்.எம்.எஸ்.ஷேக், 15.எம்.கே.மஹ்மூத் ஹஸன், 16.எம்.ஏ.கிள்று முஹம்மத், 17.எஸ்.டி.மஹ்மூத், 18.குளம் ஜமால், 19.குளம் ரிழ்வான், 20.எம்.ஹெச்.பயாஸ் முஹம்மத் புஹாரி, 21.ஷேக் ஃபரீதுத்தீன், 22.ஹிமாயத் கான், 23.எல்.எஸ்.ஐ.அப்துல் காதர், 24.எல்.எஸ்.ஐ.சாகுல்

ஹமீத், 25.கே.எம்.என்.முஹம்மது உமர், 26.குளம் காதர்.

மஜ்லிஸ் கூட்டம் நடத்த அனுமதி வழங்கிய காதிரிய்யா கொடிமர சிறு நெய்னார் பள்ளியின் முத்தவல்லி சாளை எம்.ஏ.சுல்தான் சலாஹூத்தீன் செயலாளர் எம்.டி.முத்து முஹம்மது, எம்.டி.அபுசாலிஹ் மற்றும் நிர்வாகிகள் கலந்து கொண்ட உள்ளூர் வெளியூர் உலமாக்கள், பொதுமக்கள் அனைவருக்கும் நன்றி தெரிவிக்கப்பட்டது.

மஜ்லிஸின் துணைத் தலைவரான எம்.ஏ.எஸ்,அபூபக்கர் ஹம்மாத் ஹஜ்ரத் அவர்கள், அல் ஆரிபு பில்லாஹ் அல் முஹிப்புர் ரஸூல் அஷ்ஷெய்குல் காமில் அஷ்ஷாஹ் முஹம்மத் அலி சைபுத்தீன் ஹஜ்ரத் கத்தஸல்லாஹு ஸிர்ரஹூல் அஸீஸ் அவர்களின் நினைவு மலரை அனைவருக்கும் வழங்கினார்கள்.

கண்மணி நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் அவர்கள் மீது ஸலாம் பைத்து ஓதி சங்கை மிகு நபிகளாரின் பரம்பரையில் வந்த காயல்பட்டிணம் மஹ்ளராவின் உஸ்தாதான ஸெய்யித் அப்துர் ரஹ்மான் தங்கள் அவர்களின் துஆவுடன் மஜ்லிஸ் இனிதே நிறைவுற்றது.

மதியம் லுஹர் தொழுகைக்குப் பின் மஜ்லிஸின் தலைவராக இருந்து மறைந்த மௌலானா மௌலவி அஷ்ஷைக் எஸ்.எம்.ஹெச். முஹம்மத் அலி சைபுத்தீன் ரஹ்மானி ஸுபி, காதிரி அன்னவர்களின் உருஸ் தினமான அன்று அன்னவர்களின் கலீஃபாவும் மகனாருமான மௌலவி அஷ்ஷைகு எஸ்.எம்.ஹெச் முஹம்மது அபூபக்கர் ஹம்மாது மஹ்ளரி ஸூஃபி காதிரி அவர்களின் இல்லத்தில் கந்தூரி விழாவிற்காக கேரளம் மற்றும் தமிழகத்தின் சென்னை, தஞ்சை, தூத்துக்குடி, திருநெல்வேலி, கன்னியாகுமரி, என பல மாவட்டங்களிலிருந்தும் வந்திருந்த ஸுபி ஹஜ்ரத் அவர்களின் முரீது பிள்ளைகளுக்கும், மஜ்லிஸ் உலமா கூட்டத்தில் கலந்து கொண்ட ஆலிம்கள் முக்கியஸ்தர்களுக்கும் வெகு சிறப்பான கந்தூரி சஹன் உணவுக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

அதனைத் தொடர்ந்து மாலை அஸருக்குப் பின் அன்னவர்களின் தர்கா ஷரீஃபில், மஜாரே ஷரீஃபிற்கு சந்தனம் பூசி, புனித போர்வை போர்த்தி, மலர்அலங்காரம் செய்து அவர்களின் முரீதும், கலீஃபாவுமான மவ்லானா மவ்லவி அஷ் ஷைகு நாகூர் மீரான் சூபி காதிரி ஹஜ்ரத் அவர்கள் ஃபாத்திஹா துஆ ஓதி கலந்து கொண்ட அனைவருக்கும் தபர்ருக் வழங்கப்பட்டது.

தொடர்ந்து மேற்படி கலீஃபாக்களின் தலைமையில் காதிரிய்யா கொடிமர சிறுநெய்னார் பள்ளியில் மவ்லிது மஜ்லிஸ் நடந்த பின் கந்தூரி நிகழ்ச்சிகள் இனிதே நிறைவுற்றன.

அத்தோடு அன்று காலை பஜ்ருக்குப் பின் குர்ஆன் ஷரீஃப் கத்தம் ஓதும் நிகழ்ச்சியும், அதற்கு முன் சனி இரவு பின்நேரம் ராத்திபு மஜ்லிஸும் வெகு சிறப்பாக நடந்து முடிந்திருந்தன. அனைத்து நிகழ்வுகளிலும் முரீது பிள்ளைகளும், காயல் மாநகர மக்களும் வெகு ஆர்வத்துடன் கலந்து கொண்டு சிறப்பித்திருந்தனர்.

## கொள்கை விளக்க பொதுக் கூட்டம்

மஜ்லிஸ் உலமா சபையின் அடுத்த நிகழ்வாக அஹ்லே ஸுன்னத் வல் ஜமாஅத் அகீதா கொள்கை விளக்கவுரை பொதுக்கூட்டம் காயல் குத்துக்கல் தெருவில் அமைந்துள்ள, மகான் தைக்கா ஷெய்கு முஹம்மது சாலிஹ் வலியுல்லாஹ் ரலியல்லாஹு அன்ஹு நினைவு அரங்கம் முஹ்யித்தீன் பள்ளி வளாகத்தில் மக்ரிப் தொழுகைக்குப் பின் நடைபெற்றது.

மௌலானா மௌலவி கே.என்.சையத் நூஹ் முஹ்யித்தீன் ஆலிம் மஹ்ளரி - தலைவர் மஜ்லிஸ் உலமாயி அஹ்லிஸ் ஸுன்னத் வல் ஜமாஅத் அவர்கள் தன் விளக்கவுரையில் ஹஃப்து மஸ்அலா என்னும் இந்த நூல் வழிகெட்ட தப்லீக் தலைவர்களுக்கு எதிராக எழுதப்பட்டது. ஹஃப்து மஸ்அலா என்பதன் அர்த்தம் ஏழு மஸாயில்கள் என்பதாகும். ஃபாத்திஹா ஓதுதல், மீலாது கொண்டாடுதல், உருஸ் கவ்வாலி, இன்னபிற சுன்னத் வல் ஜமாஅத் கொள்கைகளில் முரண்பட்ட வழிகெட்ட தேவ்பந்திகளான காஸிம் நானோத்தவி, ரஷீத் அஹ்மத் கங்கோஹி, அஷ்ரப் அலி தானவி போன்றோரை எச்சரிக்கும் முகமாக அல்லாமா இம்தாதுல்லாஹ் முஹாஜிரே மக்கி அவர்களால் எழுதப்பட்டது தான் இந்த நூல். அப்படிப்பட்ட புத்தகத்தை எரிக்கச் சொல்லியது அஷ்ரஃப் அலி தானவி தான்! என்பது வரலாறு. ஆனால், அருகில் இருந்து அதை எழுதியது அஷ்ரஃப் அலி தானவி என்று சொல்வதும், அதை தமிழ்படுத்தி வெளியிடும் நூரிஷாவின் அடிவருடிகள் நடுநிலை பேணுவீர் என அந்த நூலுக்கு தவறான தலைப்பை வைத்து வெளியிடுவதும் இவர்கள் பொய்யர்கள், வரலாற்று திரிபுகளை செய்வதில் கைதேர்ந்தவர்கள் என்பது வெட்டவெளிச்சமாகிறது! என விளக்கமாக தன் உரையை முன்வைத்தார்கள்.

அடுத்து உரை நிகழ்த்திய மஜ்லிஸின் செயலாளரான மௌலானா மௌலவி சையத் ஷாஹ் வஜீஹுன்னக்கி சக்காப் ஹஜ்ரத் அவர்கள் தரீகத் என்றால் என்ன அஹ்லே சுன்னத் வல் ஜமாஅத் பார்வையில் இன்றைய தரீக்காக்கள் என விளக்கமாக உரையாற்றும் போது தேவ்பந்து தரீக்கா வஹ்ஹாபிகள் சிஷ்திய்யா ஸில்ஸிலாவில் உட்புகுந்து மக்களை எவ்வாறு வழிகெடுக்கிறார்கள் என்பதை தெளிவாக விளக்கினார்கள்.

**பின் குறிப்பு :**

மஜ்லிஸ் உலமாயி அஹ்லிஸ் ஸுன்னத்தி வல் ஜமாஅத்தின் செயற்குழு கூட்டம் மற்றும் கொள்கை விளக்க பொதுக்குழு கூட்டத்தின் நிகழ்வுகளை கேபிள் மற்றும் இணைய தளம் வழியாக ஒளிபரப்ப முஹ்யத்தீன் டிவி நிர்வாகத்தினர் ஏற்பாடுகளை செய்திருந்தார்கள்.

# (38) இறைத் தூதர் இப்றாஹீம் அலைஹிஸ் ஸலாம்... இறை நேசரானதின் இரகசியம்...! - ஒரு மீள் பார்வை...

இது நெருக்கடி மிக்க நாளாகும் (11 : 77), (21:74) என விசனமடைந்து இருளில் அவர்களை வீட்டிற்கு அழைத்துவரும்படி மகளிடம் பணித்தார்கள். அவர்களது அழகையும், வருகையையும் நபியவர்களின் மனைவி, ஊரில் பற்றவைக்க ஊரார் வீட்டை முற்றுகையிட்டனர் (37 : 133 - 138) விருந்தினர்களான இவர்களை என்முன்னால் கேவலப்படுத்தாதீர்கள்! எனக்கூறியதுடன் செய்வதறியாது திகைத்து நின்றார்கள் நபியவர்கள்.

(29:26-35), (27:54-58)

மெய்யாகவே நாங்கள் உமதிறைவனின் தூதர்களாக இருக்கிறோம். நிச்சயமாக இவர்கள் உம்மை நெருங்க இயலாது. இரவின் முற்பகுதியில் குடும்பத்துடன் திரும்பிப்பார்க்காமல் ஊரை விட்டும் கடந்து சென்றுவிடுங்கள். உம் மனைவியைத் தவிர (66:10) இந்த ஆபத்து அவளையும் பிடித்துக் கொள்ளும், வாக்களிக்கப்பட்ட நேரம் விடியற்காலையாகும் - என நவின்றார்கள் மலக்குகள். (26 : 160 - 175) அதிகாலை நேரத்தில் தோசையை திருப்பிப் போடுவதுபோல் தலைகீழாக அந்த ஊர் திருப்பிப் போடப்பட, சுடப்பட்ட களிமண் கற்கள் வானிலிருந்து மழைபோல் பொழியப்பட்டன. கற்கள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொருவரின் பெயரும் எழுதப்பட்டிருந்தது.

(11 : 69 - 83), (7 : 80 - 84)

மிஃறாஜின் போது கலீலுல்லாஹ் குடியிருக்கும் ஜன்னதுன் நயீமுக்கு வருகை தருகிறார்கள் ஹபீபுல்லாஹ் அவர்கள். இந்த நயீம் சுவனத்தினுள் நால்வகை மனிதர்கள் மட்டுமே பிரவேசிக்க இயலும் என எழுதப்பட்டதை கண்டு வியப்படைந்தார்கள். அந்த பாக்கியமிகு குழுமத்தார்களாவது.

அதிகமதிகம் தானதர்மங்கள் செய்பவர், மிகுதம் நன்றி செலுத்துபவர், குணங்களை அழகுபடுத்தியவர், அடியார்களுக்கு நோவினை செய்யாதவர்.

இந்த நாற்பெரும் குணங்களின் உறைவிடமாக கலீலுல்லாஹ் சமைந்திருப்பதையே இது சுட்டுகிறது. அவர்கள் உளமாற நேசிக்கும் நம்மை இத்தகு நயீமில், கலீலுல்லாஹ் அண்மையில் இருத்தாட்டுவானாக பி ஹக்கி ரஸூலே கரீம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்.

இப்ராஹீம் கலீலானாலும், ஹபீபும் கலீலும் நீங்களே யா ரஸூலல்லாஹ்!

(வித்ரிய்யா ; 23 : 7)

## கலீலுல்லாஹ்வின் வழித்தடங்கள்

இப்ராஹீமை நீ தேர்ந்தெடுத்து அவருக்கு நெருப்பை குளிர்ச்சியாகவும், ஸலாமத்தாகவும் ஆக்கியிருக்க, நான் உன்னிடம் எதைக்கேட்பது? என்றார்கள் ஹபீபுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம். உமது நூரானது, இப்ராஹீமின் முகத்தில் பிரகாசித்திருக்க வில்லையென்றால், அவர் நம்ரூதின் நெருப்பை விட்டும் ஈடேற்றம் பெற்றிருக்கமாட்டார். என பதிலளித்தான் ஹக்கு ஸுப்ஹானஹூ வ தஆலா.

இது, மிஃறாஜில் நீர் நாடியதை கேளும் - என்றதும் ஆதம், இத்ரீஸ், நூஹ், இப்ராஹீம், மூஸா, ஈஸா அலைஹிமுஸ் ஸலாம் நபிமார்களுக்கு அருளப்பட்ட உதவிகளையும், வரிசைகளையும் கோடிட்டுக்காட்டி நான் எதனைக்கேட்பது? - என்ற ஹபீபுல்லாஹ்வின் நீண்ட உரையாடலின் ஒரு பகுதி (ராவி :இமாம் ஷிஹாபுத்தீன் ஸுஹ்ரவர்த்தி ரஹ்மதுல்லாஹ்)

தனது வெள்ளாட்டியிடம் அடுப்பை பற்ற வைத்து கைக்குட்டையை நெருப்பில் இடப்பணித்தார்கள் அனஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள். அழுக்குகள் நீங்கி பால் போன்று வெளுத்ததும், இதுகண்டு அற்புதப்பட நான் விளக்கம் கேட்க, இது நபிகளாரின் முகம் கைகள் துடைக்கப்பட்ட துணி, இதில் அழுக்கு படிந்தால் இங்ஙனமே செய்வோம். நெருப்பு அதனைத் தீண்டாது - என பதிலளித்தார்கள் (ராவி : உப்பாத் பின் அப்துஸ் ஸமத் ரலியல்லாஹு அன்ஹு)

மூஸாவே! இப்ராஹீமின் மூத்த புதல்வர் இஸ்மாயீலின் சந்ததியில் நின்றும் அஹ்மத் எனும் பெயர் கொண்ட ஒருவரை அனுப்புவேன். அவரைக்கொண்டு ஈமான் கொண்டவன் நேர்வழி பெற்றான். அவரைக்கொண்டு நேர்வழி பெறாதவன் லஃனத் பெற்றான் - என தவ்ராத் வேதத்தில் பதியப்பட்டுள்ளது.

உங்கள் தந்தை இப்ராஹீமின் சுன்னத்தான நடைமுறையே குர்பானி (அஹ்மத், இப்னுமாஜா) இது குறித்து (37 : 103), (108:2) வசனங்களிலும் வற்புறுத்தப்பட்டுள்ளது. கலீலுல்லாஹ் குர்பானி கொடுத்த துல்ஹஜ் 10 ஆம் நாளை யவ்முன்னஹ்ரு அறுப்பதற்குரிய நாளாகவே இஸ்லாத்தில் அங்கீகரிக்கப்பட்டுள்ளது.

குர்பானி பிராணியை அறுக்கும்போது வஜ்ஜஹத்து (6:79) ஓதுவது ஸுன்னத் (அபூதாவூத், பைஹகி) இதனை பலஹீனமான ஹதீஸ் என்று கூறி வஹ்ஹாபிகள் ஏற்பதில்லை. குர்பானியே கலீலுல்லாஹ்வை நினைவு படுத்தத்தான் என்ற மூல காரணம் இவர்களின் மூளைக்குள் புகாததே இந்த சருகுதலுக்கு காரணம்.

திட்டமாக கலீலுல்லாஹ்விடம் அழகிய முன்மாதிரி இருக்கிறது.(60:4,6) என்ற பதங்களின் அர்த்தம் இதுதான்:

பல்வேறு சோதனைகளின் போது கலீலுல்லாஹ் பொறுமை காத்தது போல், நீங்களும் பொறுமை செய்து அவர்களது வழியை துயருங்கள்.

(தஃப்ஸீர் ஸம்ஹானி)

கிலாஃபத் முஹாஜிரீன்களுக்கே உரியது என, அமளி சூழலிலும் வாதாடி வாகை சூடியதையும், ஜகாத் கொடாதவர்கள் மீது போர் தொடுப்பேன் என சிக்கலான காலகட்டத்தில் - முதல் கலீபா முழங்கியதையும் பெரிதும் சிலாகிப்பார்கள் அலி நாயகமவர்கள். மக்கா ஃபத்ஹில் கஃபாவினுள் நுவுவ்வத்தின் சுமையை சுமக்க முடியாமல் தவித்தார்கள் அலி நாயகமவர்கள்.

ஆனால், ஹிஜ்ரத்தின் போது இறுதி நுபுவ்வத் சுமையை தனது திண்மை தோளில் சுமந்தவர்களாகவே தவர் குகையை அடைந்தார்கள் ஸித்தீகுல் அக்பரவர்கள். ஆக, அபூபக்கர் ஸித்தீக் ரலியல்லாஹூ அன்ஹூ அவர்களின் உளவலிமை உவமைக்கு அப்பாற்பட்டதே. இதனால்தானோ என்னவோ, கலீலுல்லாஹ்வைப் பார்க்க விளைபவர் அபூபக்கரைப் பார்த்துக் கொள்ளட்டும் என நவின்றார்கள் நபிகளாரவர்கள்.

நபி இப்ராஹீமை தனது கலீலாக ஆக்கிக்கொண்டான், என்னை கலீலில் மிக சங்கை பெற்றவராக ஆக்கிக் கொண்டான். (ஹதீஸ்)

எனது பொருத்தப்படி நடப்பவரே கலீல். ஹபீபின் பொருத்தப்படி நடப்பவரே நான். கலீல் என்னை உகப்பார், ஹபீபை நான் உகப்பேன். என நபி மூஸாவுக்கு இறைபுறத்திலிருந்து பதில் வந்ததாக ஒரு குறிப்பு உள்ளது. (ராவி : இமாம் நஸயீ ரஹ்மதுல்லாஹி அலைஹி)

றப்பி அரினீ அன்ளுர் இலைக்க - நான் பார்ப்பதற்காக உன்னை காட்டுவாயாக - என நபி மூஸா அலைஹிஸ் ஸலாம் வேண்டுகோள் வைக்க, அலம்தற இலா ரப்பிக - நபியே உமது ரப்பளவில் பார்க்க வேண்டாமா?- எனக் கேட்கிறான் நூரானவன்.

தூர்ஸீனா மலைக்குப் போய் இறையுடன் வசனித்தார்கள் மூஸா நபியவர்கள். ஹபீபோ அவரது விரிப்பில் உறங்குகையில் அழைத்துவரச் செய்து வசனித்தான் ஜலீலாகிய கண்ணியவாளன்.

றப்பிஷ் ஷறஹ்லீ ஸத்ரீ - எனது நெஞ்சத்தை விரிவாக்கு என்றார்கள் மூஸா நபியவர்கள். அலம் நஷ்றஹ லகஸதறக்- உங்கள் நெஞ்சை விரிவாக்கித் தந்தோம் ஹபீபே - என்கிறான் வாஸிஃ ஆகிய விசாலமானவன்.

கியாமத்தில் பத்து வருட நீளமுள்ள ஒரு நேரம் உண்டு, அதுபோது இப்ராஹீம் நபி உட்பட மனிதரெல்லாம் எனது நஃப்ஸை காப்பாற்று, யான் உன்னிடத்தில் எனது நஃப்ஸைத் தவிர பிறிதொரு வஸ்துவை கேட்கவில்லை - எனச் சொன்னவர்களாக முட்டுக்காலின் பேரில் குந்தி இருப்பார்கள். அந்த நேரத்தில் எங்கள் நபியவர்கள் மட்டும் தான் உம்மதீ, உம்மதீ (எனது உம்மத்தே) அவர்களை காப்பாற்றுவாயாக என இறையிடம் முறையிடுவார்கள் (ராவி : ஸல்மான் ஃபார்ஸி ரலியல்லாஹூ அன்ஹூ)

இதில் கலீலுல்லாஹ்வை குறிப்பாக ஆக்கியதிலிருந்து அவர்களின் மகாத்மியத்தை உய்த்துணராலாம்.

அனைத்து ரஸூல்மார்களின் வர்ணிப்பையும் வரிசைகளையும் பொதிந்தவர்களே ரஸூலுல்லாஹ் ஸல்லல்லாஹூ அலைஹி வ ஸல்லம் - வித்ரிய்யா.

## நபி இப்றாஹீமின் சந்ததிகள்

ஆதம், இத்ரீஸ், ஷீத், ஹூத், ஸாலிஹ், நூஹ், ஷுஐப் அலைஹிமுஸ் ஸலாம் எனும் எழுவரைத் தவிர மீதமுள்ள 123993 பேரும் அபுல் அன்பியா - கலீலுல்லாஹ்வின் சந்ததிகளே என்பர் மிகுதி வரலாற்று ஆய்வாளர்கள். திருக்குர்ஆன் சிலாகிக்கும் இவர்களின் அனைத்து பண்புகளிலும், மூலவரான கலீலுல்லாஹ்வே பளிச்சிடுகிறார்கள் :

**இஸ்மாயீல்** - நேர்வழியில் சென்றவர், (6:85) மேன்மையாக்கி வைக்கப்பட்டவர் (19:55) சகிப்புத் தன்மை உள்ளவர். (37:101) நல்லவர்களில் உள்ளவர். (38:48)

**இஸ்ஹாக்** -நேர்வழியில் சென்றவர். (6:85) அருள் நிரம்பப்பெற்றவர் (12 : 6) பாக்கியங்கள் மிகைத்தவர் (37:113) பிரத்தியேகமாக தேர்ந்தெடுக்கப்பட்டவர் (38 : 46) தேர்ந்தெடுக்கப்பட்ட நல்லவர் (48:47) அறிவார்ந்தவர் (51:28)

**யஃகூப்** - நேர்வழியில் சென்றவர் (6:85) பிரத்தியேகமாக தேர்ந்தெடுக்கப்பட்டவர் (37:46) தேர்ந்தெடுக்கப்பட்ட நல்லவர் (38:47)

**தாவூத்** - நேர்வழியில் சென்றவர் (6 : 85) கல்வியாளர் & மேன்மை பெற்றவர் (27 : 15) அருளை பெற்றவர் (34:10) நம்பக்கம் மீளுபவர் (38: 17)

**சுலைமான்** - நேர்வழியில் சென்றவர் ( 6 : 85) கல்வியாளர் & மேன்மை பெற்றவர் (27 : 15) நல்லடியார் & நம்பக்கம் திரும்புகிறவர் ( 38 : 30) நம்மிடம் நெருக்கமானவர் (38 : 39)

**மூஸா** - நேர்வழியில் சென்றவர் ( 6 : 85), (37:118) தேர்ந்தெடுக்கப்பட்டவர் (7 :144), (20:13,41), (19:51) ஞானத்தைப் பெற்றவர் ( 26 : 21) நம்பிக்கையான அடியாளர் (37:122)

**யஹ்யா** - உதாரணமானவர் ( 6 : 86) சிறுவயதிலேயே சட்ட ஞானத்தை பெற்றவர் (19:12) இரக்கமுள்ளவர் & பரிசுத்தமானவர் & பயபக்தியாளர் (19:13)

**ஈஸா** - உதாரணமானவர் ( 6:86) பரிசுத்தமானவர் (19:19) அருளாளர் (19:21) நற்பாக்கியம் மிகைத்தவர் (19:31) அத்தாட்சியானவர் ( 19:21), (23:50) அருளுக்குரியவர் (43:59),

(பார்க்க :இஸ்லாத்தின் கிரீடம் கலீலுல்லாஹ்)

ஒற்றையில் இரட்டை நுழைக்கப்பட்டது ( 89:3) என் சந்ததியிலிருந்து உனது வசனங்களை ஓதிக்காண்பித்து, வேதத்தையும் ஞானத்தையும் கற்றுக்கொடுத்து, தூய்மைபடுத்துகின்றதொரு தூதரை அனுப்புவாயாக ( 2:129) - என்ற கலீலுல்லாஹ்வின் துஆவை அச்சு பிசகாமல் (வார்த்தைக்கு வார்த்தை) ஒப்புக் கொண்டதாக பலமுறை பதில்தருகிறான் முஜீபாகிய பதிலளிப்போன் (2:151), (3:164), (62:2)

ஆறாவது ஸூரத்தின் 9 & 10வது ௨ ஐன் வாசகங்கள் முழுமையுமே கலீலுல்லாஹ்வையே நேர்முகமாகவும், மறைமுகமாகவும் பேசுகிறது. இதில் வரும் ( 6:75) & (6:73) வாசகங்களை இணைத்துப் பார்த்தால், வாக்கில் உண்மையான கலீலுல்லாஹ்விடமே வானங்கள் - பூமியின் ஆட்சி ஒப்படைக்கப்பட்டிருந்ததாக பகர்வர் ஞானவான்கள். (7:158)

எனது தொழுகையும் இதர வணக்கங்களும் வாழ்வும் - மரணமும் ரப்புல் ஆலமீனான அல்லாஹ்விற்கே உரியது என்ற கலீலுல்லாஹ்வின் வாக்கை (எழுத்து மாறாமல் ) அப்படியே சொல்லும்படி பணிக்கிறான் ஹபீபுல்லாஹ்விடம் ( 6 : 163) மற்றொரு இடத்திலோ,

தொடரும்...ஆக்கம் : டாக்டர் முஹ்யித்தீன் கதீஜா காதிரி

- 9443125786

# தலைநகர் டில்லியில் விவசாயிகளின் தொடரும் போராட்டம்...! விவசாயிகளின் கேள்விகளுக்கு பதில் சொல்லாமல் பதுங்கும் பிரதமர்...? பிஜேபி ஆட்சி காலத்தின் அராஜகங்களும், அட்டூளியங்களும்...! நமது மூவர்ண தேசிய கொடியை அவமதித்த ஸ்லீப்பர் செல் யார்...?

ஒட்டகனார் பக்கம்...



பல இடங்களில் தேடியும் ஒட்டகனாரை நம்மால் கண்டுபிடிக்க முடியவில்லை. அவர் செல்லுமிடங்கள் அவரின் வசிப்பிடம் எங்குமே அவரைக் காண இயலவில்லை. மனிதரிடம் கைப்பேசி இல்லாததால் என்றுமே தொடர்பு எல்லைக்கு அப்பாலே இருப்பவர். செய்யாத வேண்டுதல் எல்லாம் செய்தும் துஆக்கள் பூர்த்தியானது போல் தேடித் துளாவி கண்டுபிடித்த போது டில்லி கிஸான் ஆந்தோலனில் மனிதர் முன்னந்தியராக நிற்கிறார். அந்தக்கடுங் குளிர் கேனன் வாட்டர்களின் பீச்சி அடித்தல், பல அடுக்கு பேரிகேட்டர்கள் என்னும் தடுப்புகள் அத்தனையும் மீறி, ஆனந்த நிலையில் லங்கரில் பூரி பாஜி, சப்பாத்தி ஸப்ஜி, மீட்டே சாவல், என வகைவகையான வட இந்திய உணவுகளை சுவைத்துக் கொண்டிருந்தவரை கண்டுபிடித்து ஓரம்கட்டினோம். தமது வடஇந்திய விவசாய நண்பர்களான சீக்கிய பெருமக்களை நமக்கு அறிமுகப்படுத்தி தென்இந்தியாவில் இருந்து அதிலும் குறிப்பாக தமிழ் நாட்டில் இருந்து வந்திருப்பவர்கள் என நம்மை அறிமுகப்படுத்தியதோடு அல்லாமல் தமிழ்பாசம் பொத்துக் கொண்டு மனிதரை சும்மா சொல்லக்கூடாது நமக்கு ரொம்ப மரியாதை செய்தார்.

கிஸான் ஏக்தா ஜிந்தாபாத்! என்ற கோஷத்தோடு ஒட்டகனார் ஜிந்தாபாத்! என்று நாம் முழங்கினோம். நம்மை தனி கூடாரத்திற்கு அழைத்துச் சென்றவர் அந்த கடுங்குளிரிலும், இஞ்சி டீயை வரவழைத்துக் கொடுத்தார். சுவைத்தபடியே செய்திகளுக்குத் தாவினோம். அவர் சொன்ன செய்திகள் ஏராளம்! ஏராளம்! எதை விடுவது, எதை எழுதுவது? என்று திக்குமுக்காடிப்போனோம்!

மத்திய மாநில அரசுகளின் நாட்கள் எண்ணப்படுகின்றன என்று அரசியலோடு துவங்கியவர் என்ஆர்சி, சிஏஏ, ஷாஹீன்பாக், அரசு நடத்திய தில்லுமுல்லுகளையும் ஆர்எஸ்எஸ், பிஜேபி, குண்டர்களின் அராஜகம் அடாவடித்தனம் அனைத்தையும் தாண்டி அரசே மேற்கொண்ட சாம, பேத தண்டங்கள் அத்தனையும் பிரயோகித்தும், உண்மையான போராட்டத்தில் இருந்து ஒரு இன்ச் கூட பின்வாங்காமல் இரும்புச் சுவராக, உடும்புப் பிடியாக ஆர்எஸ்எஸ் பிஜேபி அரசுகளின் கண்ணில் விரல்விட்டு நோண்டிக் கொண்டிருக்கிறார்கள் விவசாயிகள்.

பேச்சுவார்த்தை என்று கிடப்பில்போடும் திட்டமாக மூன்று கருப்புச் சட்டங்களையும் ஜவ்வாக இழுத்து 11 தடவை பேசியும் ஜண்டா என்ற அமித்ஷா உட்பட ஒரே முறை கலந்துகொண்டபின் விவசாயிகளின் எந்த ஒரு நியாயமான கேள்விக்கும் பதிலளிக்க முடியாமல் திண்டாடிப் போன உள்துறை அமைச்சர் அடுத்த பேச்சுவார்த்தைக்கு எட்டிக்கூட பார்க்கவில்லை. இதைப்போய் பிரதமரிடம் சொன்னதாலோ என்னவோ மன் கி பாத்தில் டன்னு டன்னாக உதார்விட்டுத் தள்ளும் பிரதமர், யாரை பேச்சு வார்த்தைக்கு அனுப்புவது? எப்படி பேசுவது? மூன்று விவசாய கருப்பு சட்ட சிக்கலில் இருந்து - புதை சேற்றில் சிக்கியவர்கள் போல் அரசின் அனைத்து நடவடிக்கைகளும் மேலும் புதைகுழியில் சிக்கவைத்துக் கொண்டே விவசாயிகளின் போராட்டம் வீர தீரத்துடன் மேலும் உறுதியுடன் தொடர்கிறது.

நாம் நடுவிலே குறுக்கிட்டோம். விவசாயிகளின் மீது பல குற்றச்சாட்டுகளை அரசு முன்வைக்கிறதே அதற்கான பதில் என்ன? என்று கேட்ட போது நம்மை ஏளனமாகப் பார்த்த ஒட்டகனார் தொடர்ந்தார்.

பணமதிப்பு நீக்க நடவடிக்கை ஜிஎஸ்டி திணிப்பு, ஸ்வஜ் பாரத், வந்தே பாரத் ஸ்மார்ட் இந்தியா டிஜிட்டல் இந்தியா, மேக் இன் இந்தியா, மேட் இன் இந்தியா, ரிசர்வ் வங்கியில் இருந்து பணக் கொள்ளை, அரசு பொதுத் துறை நிறுவனங்களான வங்கித் துறை, எல்ஐஸி, அஞ்சல் துறை, பிஎஸ்என்எல், விமானத் துறை, இரயில்வே துறை சுரங்கத் துறை, அணுமின் நிலையம், கஷ்மீரின் 370, பாபரிப் பள்ளி தீர்ப்பு வழங்கிய நீதிபதிக்கு எம்பி பதவி வழங்கியது, 5 ஏக்கர் நாடகம், ஷாஹீன்பாக் கலவரம், தடுப்பு முகாம்கள் கட்டியது, மராட்டியம், ஹரியானா, தமிழகம், பிஹார் என எல்லா மாநிலங்களிலும் அரசியல் தகிடுதத்தங்கள், பிஜேபி ஆளும் அனைத்து மாநிலங்களிலும் பெண்கள் மீது சிறுபான்மையினர் மீது கட்டவிழ்த்து விடப்பட்டிருக்கும் அடாவடித்தனங்கள், முத்தலாக், பில்கீஸ் தாதி, நீதித்துறையில் தலையீடு, ஜஸ்டிஸ் லோயா கொலை வழக்கில் முதல் அக்யூஸ்டாக இருந்தவரின் பெயர் நீக்கம், ஷாஹீன் பாக் கலவரத்தை கண்டித்த நீதிபதி இடமாற்றம், இராணுவ துறையில் ஆர்எஸ்எஸ்ன் தலையீடு, பசு குண்டர்கள், ஸ்டெர்லைட்டில் 13 பேர் அரச படுகொலை, கோவில்பட்டி தந்தை மகன் போலீஸால் படுகொலை, ஃபிரண்ட்ஸ் ஆஃப் போலீஸ் இவையெல்லாம் தான் மக்களின் கோபமாக வெளிப்பட்டிருக்கிறது.

ஒரு பழமொழி உனக்குத் தெரியுமா ஒருவரை ஒருமுறை ஏமாற்றலாம்! பலரை பல முறை ஏமாற்றலாம்! எல்லோரையும் எல்லா முறையும் ஏமாற்ற முடியாது! அதற்கு சான்றாக ஆர்எஸ்எஸ் பிஜேபி அரசு கிஸான் ஆந்தோலன் என்னும் விவசாயிகளின் போராட்டத்தில் மாட்டிக் கொண்டு முழி பிதுங்கி சோஷியல் மீடியா என்னும் சமூக ஊடகத்தில் உலகளாவிய அளவில் இந்தியாவின் பெயர் கொடிகட்டிப் பறக்கிறது. லண்டன் டைம்ஸ் எழுதும்போது பல ஆண்டுகளாக சிறையில் இருக்கும் வயதான பாதிரியாருக்கு திரவ உணவு உட்கொள்ள ஸ்ட்ரா

கொடுக்கலாமா கூடாதா என இந்திய நீதி மன்றம் தடுமாறுகின்ற அதே வேளையில் புல்வாமா குண்டு வெடிப்பு முதல் அனைத்து கிரிமினல் ஊழல் குற்றச்சாட்டுகளில் பூச்தா ஹை பாஹ்ரத் (நேஷன் வான்ட்ஸ் டு நோ) என்று காட்டு கூச்சல் போடும் கோதி மோதி மீடியாவின் அர்னப் கோஸ்வாமியின் 500 வாட்ஸ்ஸப் உரையாடல்கள் இருக்கும் போதே மூன்றே நாட்களில் உச்சநீதிமன்றம் ஜாமீன் வழங்குகின்றது. இது எந்த வகையான நீதி என டைம்ஸ் ஆப் லண்டன் (ஆன்லைன் மீடியா யூ டியூப் சேனல்) கேள்விகேட்கிறது.

எனவே இந்த விவசாய போராட்டத்தை நசுக்கிவிடுவது அமுக்கிவிடுவது சைனா பாக்கிஸ்தான் நேப்பாள் பார்டர்களைவிட இஸ்ரேலின் முறையில் பேரிகேட்டிங் செய்து, சுவர்கள் எழுப்பி, பள்ளங்கள் தோண்டி, கூர்மையான ஆணிகளை தேசிய நெடுஞ்சாலைகளில் பொருத்தி, உச்ச நீதிமன்றத்திடம் தள்ளிவிட்டு, பேச்சுவார்த்தைகளில் அழைக்கழிக்க வைத்து, விவசாய சங்கங்களுக்குள் போட்டி பொறாமை சிண்டு முடித்துவிடல், எல்லாவற்றையும் விட மேலான செங்கோட்டையில் தமது பிஜேபி ஆர்எஸ்எஸ் ஆட்களை வைத்து நமது மூவர்ண தேசிய கொடிக்கு அவமானத்தை ஏற்படுத்தி, குடியரசு தினத்தில் அனுமதியளிக்கப்பட்ட பாதைகளை திசைதிருப்ப வைத்து 7 மணிக்கே ஊர்வலத்தை புறப்பட வைத்து இதற்கும் மேலான தகிடுதத்தங்கள் செய்தும் அசைக்க முடியாத இந்த போராட்டம் மூன்று கருப்புச் சட்டங்கள் நீங்கும் வரை இந்தியா முழுக்க போராட்டங்கள் தொடர்ந்து கொண்டே இருக்கும் என்பது விவசாயிகளின் திடமான சிந்தனையையும் ஒருமித்த கருத்தையும் வெளிப்படுத்துகின்றன.

மஜ்லிஸ் உலமா கூட்டத்தைப் பற்றி பேச்சை மாற்றினோம் அதுதான் செய்திக் கட்டுரையாக வருகிறதே மக்களிடம்போய் சேரட்டும் அதற்குப்பின் அதைப் பற்றி சொல்கிறேன் என்று கூறி, நம்மை தமிழ்நாடு எக்ஸ்பிரஸ் இரயிலில் ஏற்றி விட்டு கிளம்பிச் சென்றார் ஒட்டகனார்.

# வலிமார்களும் வானசாஸ்திரமும்

ஹிஜ்ரி 588, கி.பி 1192ல் 57 வயதில் காஜா முயீனுத்தீன் சிஷ்தி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் இந்தியா வந்து சேர்ந்தார்கள். அந்த குறுநிலத்தை பிரித்திவிராஜ் என்கிற ராஜபுத்திர அரசன் ஆண்டு கொண்டிருந்தான். அவனுடைய அரண்மனை தாரா கட் என்ற உயரமான குன்றின் மீது அமைந்திருந்தது. அந்த குன்றின் அடிவாரத்தில் அரண்மனையின் ஒட்டகங்கள் அடைக்கும் தொழுவம் இருந்தது. தொழுவத்தின் அருகில் காஜா நாயகம் அவர்கள் வந்து அமர்ந்தார்கள்.

அரசாங்க ஒட்டக மேய்ப்பாளர்கள் அங்கு தங்குவதற்கு அவர்களை அனுமதிக்கவில்லை. எனவே அவர்களை அந்த இடத்தை விட்டும் காலி செய்ய சொன்னார்கள். காஜா முயீனுத்தீன் சிஷ்தி அவர்கள் ஏன்? என்று அவர்களிடம் கேட்க, இது ஒட்டகம் அடைக்கப்படும் இடம் இங்கு மற்றவர்கள் தங்குவதற்கு அனுமதி இல்லை என்றார்கள். உடனே அடைக்கப்பட்ட ஒட்டகம் அடைக்கப்பட்ட மாதிரியே இருக்கட்டும் என்று கூறி பக்கத்தில் உள்ள அன்னா சாகர் என்ற ஏரிக்கரைக்கு வந்து விட்டார்கள்.

மறுநாள் காலையில் ஒட்டகங்களை எழுப்ப முயன்ற அதன் பணியாளர்கள் ஒட்டகங்கள் எவையும் எழுந்திருக்க முடியாமல் படுத்தே கிடந்ததை கண்டு திகைத்தனர். உடனே நேற்று ஒரு பெரியவரை விரட்டும் போது அவர் சொன்ன பிரகாரம் ஒட்டகங்கள் எழுந்திருக்க முடியாமல் அடங்கிக் கிடக்கின்றன என்பதை அறிந்து, பணியாளர்கள் ஓடி வந்து காஜா நாயகத்திடம் மன்னிப்பு கேட்க, காஜா நாயகம் அவர்கள், ஒட்டகங்களை எவன் அடக்கி வைத்தானோ அவனே அதனை எழுப்பி விடுவான் என்று கூற ஒட்டகங்கள் எழுந்து நின்றன.

மன்னன் பிரதிவிராஜனின் தாய் ராஜ மாதா வாசவதத்ரா ஜோதிட கலையில் நிபுணத்துவம் பெற்றவர். அவர் தன் மகன் பிரதிவிராஜனிடம் உன்னுடைய இந்த குறுநில ஆட்சி இன்னும் 12 வருடத்தில் முடிவுக்கு வந்துவிடும். இன்ன இன்ன அடையாளங்களோடு வரக்கூடியவரால் அது நடத்தப்படும் என்றார். அவருடைய உருவத்தை மகன் வரைந்து கேட்க ஜோதிடம் மற்றும் ஓவியக்கலையில் தேர்ச்சி பெற்ற ராஜ மாதா காஜா நாயகம் அவர்களின் உருவத்தை வரைந்து கொடுத்தார்.

மேலும் தன் மகனிடம் மகனே! நீயோ குறுநில மன்னன் அஜ்மீரையும், அதன் சுற்றுவட்டாரத்தையும் மட்டுமே ஆள முடியும். அவரோ பெரும் கீர்த்தி பெற்ற இறை நேசர். அவர் அகண்ட பாரதத்தையே உலக இறுதி நாள் வரை ஆளக்கூடியவர் என்று ஜோதிடத்தின் மூலம் கணித்தவர்.

காஜா நாயகத்தின் ஆட்சி இந்தியா மட்டுமல்லாது பாகிஸ்தானிலும் தொடர்கிறது. அஜ்மீரின் ஒவ்வொரு வருடாந்திர கந்தூரியின் போது இந்திய அரசாங்கத்தில் இருந்து மக்பரா விரிப்பு கண்ணியமான முறையில் காணிக்கையாக செலுத்தப்படுகிறது. ராஜ மாதா வாசவதத்தராவின் வான சாஸ்திரத்தின் கணிப்பு மிகச் சரியாக இருந்திருக்கிறது.

இந்த ஜோதிட வான சாஸ்திரம் என்ற கலை இருப்பது பற்றி இஸ்லாம் கூறுவது என்னவெனில் இந்த வான சாஸ்திரத்தை வானத்திலிருந்து பூமிக்கு கொண்டு வந்தவர் நபி இத்ரீஸ் அலைஹிஸ் ஸலாம் அவர்களாகும்.

ஒருநாள் வெயில் கடுமையாக இருந்தது. அதன் வெப்பம் தாளாது இத்ரீஸ் நபியவர்கள் பெரிதும் துயருற்றார்கள். சூரியனிலிருந்து இவ்வளவு தொலைவு பூமியிருந்தும் இங்குள்ள மக்களுக்கு இவ்வளவு

வெப்பமாக இருக்கிறது. அந்த சூரியனை சுமக்கும் அந்த வானவர் அதன் வெப்பத்தை எவ்வாறு பொறுத்துக் கொள்வார்? இறைவனே அவரின் துன்பத்தை இலகுவாக ஆக்குவாயாக! என்று துஆ கேட்டார்கள்.

அவ்வண்ணமே சூரியனின் வெப்பம் குறைக்கப்பட்டது. அந்த வானவர் சந்தோஷப்பட்டு இத்ரீஸ் அலைஹிஸ் ஸலாம் அவர்களை காண பூமிக்கு வந்து, நபியவர்களை வானலோகத்திற்கு அழைத்துச் சென்று மலக்குகள் பார்வையிடும் ஸிர்ருல் மலக்கூத்து என்கிற பிரபஞ்சங்களின் இரகசிய கிதாபை படிக்கக் கொடுத்து, மேலும் சூரியனுடைய கோள்கள் சுற்றி வரும் பாதைகளில் அந்தந்த கிரகங்களோடு அவரையும் பயணிக்க செய்தார்கள்.

இப்படி சனிக்கோளுடன் சேர்ந்து 30 ஆண்டுகள் விண்ணிலே பயணித்து வந்தார்கள். ஆகையால், தான் நேரில் கண்ட நட்சத்திரங்களைப் பற்றியும், ஸிர்ருல் மலக்கூத்து கிதாபையும் (பிரபஞ்சங்களின் இரகசியத்தை) ஒன்றாக சேர்த்து வான சாஸ்திரத்தை இவர்கள் தொகுத்து கொடுத்தார்கள்.

இதெல்லாம் நிஜமாலுமா? என்று நீங்கள் கேட்பது புரிகிறது. இன்னும் விரிவாகப் பார்ப்போம்...

பைலபூஸ் மன்னர் கிரேக்க அரச குமாரி கிலாயா என்பவரை மணக்கிறார். சிற்றரசர் மல்க்கான், அரச குமாரியின் தங்கை அல்கா என்பவரை மணக்கிறார். பைலபூஸ் மன்னருக்கு 40 ஆண்டுகாலமாக சூரிய அஸ்தமனத்திற்குப் பிறகு வானத்தைப் பார்த்து கோள்கள் நட்சத்திரங்கள் ஆகியவற்றின் அமைப்புகளை ஆராயும் வழக்கம் உண்டு.

இந்த வான சாஸ்திரத்தின் மூலம் கியாமத் நாள் வரை ஜீவித்திருக்கக் கூடிய அவதார புருஷரை பெற முடியும் என்று நம்பி அந்த குறிப்பிட்ட நட்சத்திரம் மேலோங்கும் போது மனைவியுடன் வீடு கூட வேண்டும் என்ற வான சாஸ்திரத்தின் நியதிபடி சிற்றசர் மல்கான் தன் மனைவி அல்காவுடன் வீடு கூடி ஹிள்று அலைஹிஸ் ஸலாம் அவர்களைப் பெறுகிறார்கள். சற்று நாழிகை கழித்து பைலபூஸ் மன்னர் தன் மனைவி கிலாயாவுடன் வீடு கூடி உலகம் சுற்றி வந்த மாமன்னர் துல்கர்னைன் அலைஹிஸ் ஸலாம் அவர்களை பெறுகிறார்கள்.

ஒரு குழந்தை பிறக்கும் போது, அதன் முதல் மூச்சு, வடிவம் பெற்று அது உலகத்தில் ஓர் உயிராய் பிரவேசிக்கும் போது, இந்த பிரபஞ்ச வெளியிலும் ஒரு பிரத்தியோகமான நிகழ்ச்சி நிகழ்கிறது என்கிறது வான சாஸ்திரம்.

ஏதோ ஒரு நட்சத்திரம் ஒரு குறிப்பிட்ட நிலையில் உச்சம் பெறுகிறது. இந்த நட்சத்திரம் மற்றும் கிரகங்களின் நிலை இதெல்லாம் பிறந்த உயிருக்கு தொடர்புபடுத்தி நிறைய நிறைய கணிக்கிறார்கள்.

இது விஷயமாக குர்ஆனில் தேடியபோது, நபி இப்ராஹீம் அலைஹிஸ் ஸலாம் அவர்கள் நட்சத்திரங்களை கூர்ந்து பார்த்தார். குர்ஆனில் (37:88) இலா என்ற பதம் பயன்படுத்தப்பட்டிருப்பதால் கூர்ந்து என்று அர்த்தம் வரும், எனவே நட்சத்திரக் கலையை பயின்றார். மேற்கண்ட வசனத்தைத் தொடர்ந்து இப்ராஹீம் அலைஹிஸ் ஸலாம் அவர்கள்

பின்னர் நட்சத்திரங்களைக் கூர்ந்து பார்த்து, நிச்சயமாக எனக்கு ஒரு நோய் ஏற்படும் போல் இருக்கிறது என்று கூறியதாகவே குர்ஆன் (37 : 88, 89) குறிப்பிடுகிறது.

எந்த நபியுடைய ஜென்ம நட்சத்திரமும் விண்ணில் அவர் பிறப்பதற்கு முன் தோன்றாமல் இருந்ததில்லை! என இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள்.

நபி மூஸா அலைஹிஸ் ஸலாம் அவர்கள் பிறப்பதற்கு முன்னதாக பிர்அவ்னின் அரண்மனையில் உள்ள வான சாஸ்திரிகள் வானில் ஜென்ம நட்சத்திரம் தோன்றிவிட்டது. இது ஓர் அவதாரப் புருஷன் பனீ இஸ்ரவேலர்களில் பிறந்ததற்குரிய அறிகுறி என்று கணித்ததும், ஒரு லட்சத்திற்கும் அதிகமான, பிறந்த ஆண் குழந்தைகளின் தலை சீவப்பட்டது. அக்கால வான இயல் வல்லுநர்கள் கணித்ததில் தவறெதும் உண்டா? மூஸா அலைஹிஸ் ஸலாம் பிறக்காமலா போனார்கள்? பிறந்தார்கள் அல்லவா? குர்அன் (20 : 39), (28 : 07) இது பற்றி கூறுகிறது.

இதை போன்றே நபி ஈஸா அலைஹிஸ் ஸலாம் அவர்கள் பிறக்கும் போது மூன்று வான இயல் வல்லுநர்கள் ஜென்ம நட்சத்திரம் வானில் தோன்றியதைக் கண்டு பைத்துல் முகத்தஸ் வந்து சேர்ந்து இஸ்ரவேலர்களின் அரசர் பிறந்து விட்டாரா என்று ஐரதூஸ் மன்னனிடம் கேட்க, பின் விசாரித்ததில் மாட்டுத் தொழுவத்தில் நபி ஈஸா அலைஹிஸ் ஸலாம் அவர்கள் பிறந்ததும் உண்மை தானே!?

பதினோரு நட்சத்திரங்களும், சூரியனும், சந்திரனும் எனக்கு தலை வணங்கக் கண்டேன் குர்ஆன் (12:04) என்று சிறுவராக இருந்த நபி யூஃசுப் அலைஹிஸ் ஸலாம் கனவில் கண்ட நட்சத்தரங்கள் உம்முடைய சகோதரர்கள் என்பதை தந்தை நபி யாகூப் அலைஹிஸ் ஸலாம் அவர்கள் அறிவிக்கவில்லையா!?

ரோமபுரி ஹெர்குலிஸ் மன்னர் இன்றிரவு நான் நட்சத்திர மண்டலத்தை ஆராய்ந்த போது விருத்தசேதனம் செய்யப்பட்டவர்களின் மன்னர் தோன்றிவிட்டதாக ஜென்ம நட்சத்திரத்தின் மூலம் அறிந்தேன் என்று கூறி அண்ணலெம் பெருமானார் நபி முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் அவர்களின் பிறப்பை பதிவு செய்யவில்லையா?

- புகாரி பாகம் 1 ; ஹதீஸ் 07

இறை நேசர் ஹாஜா முயீனுத்தீன் சிஷ்தி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் நாயகத்தின் ஆட்சி இன்னும் நடந்து கொண்டுதானே இருக்கிறது? இது கியாமத் நாள் வரை தொடரும் அல்லவா? இன்ஷா அல்லாஹ்!

- சமூக வலைதளத்தில் அதிகம் பகிரப்பட்ட கட்டுரை

# ரகசியங்களின் ரகசியம்

## ஸிர்ருல் அஸ்ரார் (36)

ஸிர்ருல் அஸ்ரார்



## (12) துறவிகளைக் குறித்து...

4.இறை நெருக்கத்தைப் பெற்ற இவர்கள் மறுமையில் முதல் வரிசையில் நிற்பவர்களாதலால், இதுபோன்று விழித்தனர் ஆன்றோர் பலர். ஸஃப் - என்பது அரபியில், வரிசை/அணியைக் குறிக்கும் சொல்.

அண்ட சராசரங்களில் நான்கு விதமான சாம்ராஜ்யங்கள் / உலகங்கள் இருப்பதை, ஒவ்வொன்றாகக் காண்போம்:

1. நீலம் - நீர் - நெருப்பு - ஆகாயம் - எனும் மூலவஸ்துக்களின் உலகமாகும்.

2. ஆன்மீகவாதிகள் - மலக்குகள் - ஜின்கள் - கனவுகள் - இறப்புகள் - எட்டு சுவனத்தின் வெகுமதிகள் - ஏழு நரகத்தின் நீதிகள் - எனும் ஜடத்துவ உலகமாகும்.

3. வார்த்தைகளின் - அல்லாஹ்வின் பண்புகள் மற்றும் செய்திகளின் (வஹீ) மூலம் மறைக்கப்பட்ட - வரைபட்டிகையின் உலகமாகும்.

4. சொற்களால் விவரிக்கமுடியாத அல்லாஹ்வின் பரிசுத்தமான சாற்றின் சாம்ராஜ்யமாகும். இந்த படித்தரத்தில், சொற்களோ பெயர்களோ பண்புகளோ ஒற்றுமையோ - என எதுவுமே இல்லை, அல்லாஹ்வை(யும் அல்லாஹ்வாக ஆனவரையும்) தவிர, வேறெவரும் இதனை அறியமாட்டார்கள்.

இறைஞானமும் நான்கு வகைப்படும்:

1. அல்லாஹ்வின் ஏவல்களை / விதிமுறைகளைக் குறிக்கும் ஞானம். இது, உலகின் வெளி அம்சத்துடன் சம்பந்தப்பட்டதாகும்.

2. மறைவானவற்றைச் சார்ந்த ஞானம். இது, காரணகாரியத்தின் அந்தரங்க ஞானமாகும்.

3. ஆத்மாவின் ஞானமாகும். இது, சுயஞானம் மற்றும் அதன் வழியான- இறைவியின் அறிவை அடைவதாகும்.

4. இறுதியான உண்மையின் யதார்த்த ஞானமாகும்.

ஆன்மாக்களும் நான்கு வகைப்படும்:

பொருளிய ஆன்மா, விழிப்புணர்ந்த ஆன்மா, ஸுல்தானிய ஆன்மா, தெய்வீக ஆன்மா.

படைத்தவன் வெளிப்பாடாகும் தோற்றங்களும் நான்கு வகைப்படும்:

முதலாவது வெளிப்பாடு, இதயத்தில் இருப்பது போன்ற வடிவங்கள், தோற்றங்கள் மற்றும் வண்ணங்கள் ஆகும்.

இரண்டாவது வெளிப்பாடு, பொருளுலகில் நடைபெறும் செயல்கள் மற்றும் எதிர் செயல்கள் ஆகும்.

நான்காவது, அவனது சாற்றின் வெளிப்பாடாகும்.

அறிவு, புத்தி மற்றும் காரணம் சார்ந்த உலகிய சக்தியும் (reasoning) நான்கு வகைப்படும்:

இந்த - வாழும் உலகிய நிகழ்வுகளை குறித்த அறிவு, மறுமையைக் கருதி - அதனைக்குறித்து ஆலோசனை செய்யும் அறிவு, ஆன்மீகம் குறித்த அறிவு, ஆன்மீக ஞானம் மற்றும் முழுமையான சலனமற்ற மனம் பற்றிய அறிவு.

இப்போது விவாதித்த பொருளும் / பாடங்களும் நான்கு வகைப்படும் / நான்கு விதமான ஞானமாகும், நான்கு ஆன்மாக்கள், நான்கு விதமான வெளிப்பாடுகள், நான்கு படித்தரங்கள் மற்றும் நான்கு அறிவுகள் ஆகும்:

சில மனிதர்கள் - முதல் படித்தரமான - ஞானம் / ஆன்மா / வெளிப்பாடு / அறிவினிலேயே, நின்று விடுவார்கள். இவர்கள் முதலாவது சுவனமான - வீட்டுக்காவலனின் சுவனத்தில் தங்கி விடுவார்கள் அதாவது,

உலகிய சுவர்க்கமே, இவர்களுக்குரியது.

ஞானம் / ஆன்மா/ வெளிப்பாடு மற்றும் அறிவின் - இரண்டாவது படித்தரத்தில் உள்ளவர்கள், இன்னும் உயர்ந்த சுவனத்தில் இருப்பார்கள். அல்லாஹ்வின் நயம்/ கருணை, அவனது படைப்புகளின் மீது வீழும் மகிழ்வின் தோற்றமே இதுவாகும். இந்த சுவனம்,

மலக்குகளின் சாம்ராஜ்யத்தில் உள்ளதாகும்.

ஞானம் / ஆன்மா / வெளிப்பாடு மற்றும் அறிவின் மூன்றாவது படித்தரத்தில் உள்ள மனிதர்கள்.

பரலோக சுவனத்தில் இருப்பார்கள், அது, ஒற்றுமையின் சாம்ராஜ்யத்தில் உள்ள அல்லாஹ்வின் தெய்வீக பெயர்கள் மற்றும் பண்புகளின் வெளிப்பாடாகும்.

நான்காவது, தெய்வீக கட்டளையின்படி நல்லுணர்வோடு ஒத்துப்போகும்.

فَفِرُّوْٓا اِلَى اللّٰهِ ط

அல்லாஹ்விடம் அடைக்கலமாகுங்கள் / தஞ்சமடையுங்கள் மற்றும் நபிகளாரின் அறிகுறிகளைப் பின்பற்றுங்கள் - எனும் உயரிய அகமிய கோட்பாட்டைப் பின்பற்றியதாகும்.

وَهُمَا حَرَامَانِ عَلٰى اَهْلِ اللّٰهِ

அல்லாஹ்வைத் தேடுபவர்களுக்கு, இவ்வுலகமும் மறுமை உலகமும் - இரண்டுமே - சட்ட விரோதமானதாகும்.

நமது எஜமானார் மாநபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் அவர்கள், இரு உலகங்களும் சட்ட விரோதம், என வெளிப்படையாகக் கூறிவில்லை. இதன் இரகசியம் கசியும்...

மொழியாக்கம் : முனைவர் கே.முஹம்மது அப்துல் காதிர் காதிரி, பெங்களூர் - 07348811654

## தர்கா கேலரி : புகைப்படத் தொகுப்பு



மஜ்லிஸ் உலமாயி அஹ்லிஸ் ஸுன்னத்தி வல் ஜமாஅத்தின் கொள்கை விளக்க பொதுக் கூட்டம் விபரம் பக்:5ல்



அஜ்மீர் காஜா நாயகம் அவர்களின் உருஸ் தினத்தை முன்னிட்டு ஹிஜ்ரி 1442 ஆம் ஆண்டு ரஜப் பிறை 06 (18.02.2021) வியாழக்கிழமை அன்று மாலை மக்ரிப் தொழுகையைத் தொடர்ந்து நாகூர் காதிரிய்யா தரீக்காவின் சார்பாக தாருல் காதிரிய்யா திக்ரு இல்லத்திலும் நாகூர் செய்யது பள்ளித்தெரு காஜா இல்லத்திலும் திக்ரு மஜ்லிஸ் நடைபெற்றது.

செய்தி :
எஸ்.ஷேக் ஹசன் சாஹிபு
கால்மாட்டுதெரு, நாகூர் ஷரீஃப்



நாகூர் ஆண்டகையின் 404 ஃபகீர்களின் தலைவர், திட்டுவிளை வாகையடி ஃபக்கீர் பாவா ஹயாத் வலியுல்லாஹ் அவர்களின் உருஸ் ரஜப் 27

## வாசகர் வட்டம்...!

பின்னட்டை போட்டோக்கள், வரலாற்று ஆவணங்களே!
- அல்ஹாஜ் ஜமால் பாப்பா, சென்னை.

வஹ்ஹாபிய மத விஷமிகள் பற்றிய தலையங்கம், அடிக்கடி சுட்டிக்காட்டப்பட வேண்டும்.
- மௌலவி ஜியாவுத்தீன் மஹ்ழரீ, இலங்கை.

திருமணத்திற்கு உகந்த நாட்களைத் தந்தமைக்கு ஜஸாக்கல்லாஹ்!
- ஜல்வத் பாத்திமா, ரவணை.

வினாடி வினா வினாக்களை எளிமை படுத்தலாமே!?
- மர்ஜானா பேகம், இராமநாதபுரம்.

ஸிர்ருல் அஸ்ரார், முந்தைய தொடர்கள் தனித் தொகுப்பாக கிடைக்குமா?
- ஃபைரோஸ் பாத்திமா, ஐதராபாத்.

ஆதி தமிழர்களின் எண்களின் அமைப்பு முறை, ஆச்சரியமாக இருந்தது.
- மஹ்பூபே இலாஹி காதிரி, கோவை.

ஆல்போல் இதழ் தழைக்க துஆ செய்கிறோம்!
- காமிலா காதிரி, பூவாறு.

ஒட்டகனார் பகுதியில் அரசியல் நெடி தூக்கலாக உள்ளதே?
- ரியாஸ் கான், மதுரை.

☪ கஃபா அஸ்திவாரமிடப்பட்ட தினம், முற்றிலும் அறியாத புதிய செய்தி!
- ஹைருன்னிஸா, மலேஷியா.

இலங்கை தக்கியாக்களின் வரலாறு, இதழை மெருகூட்டியது.
- குலாம் ரஸூல் ஆலிம், காத்தான்குடி.

எனது பெயரே இஸ்முல் அஃளம், என்ற குத்பு நாயகத்தின் வரிகளில், ஓராயிரம் அர்த்தங்கள் பொதிந்துள்ளன.
- அப்துல் ஜப்பார் காதிரி, நாகை.

முந்தைய தர்ஹா இதழ்களை விரைவில் பிடிஎஃப் ஆக்குங்கள்.
- ஹாஜி ரஷீத் லெப்பை, முத்துப்பேட்டை.

☪ குறியிடப்பட்டது பரிசுக்குரிய விமர்சனம்